# கல்கி

KALKI
28.2.99
ரூ. 4.50

உள்ளே...

தூத்துக்குடியைக்
கலக்கிய
கிரிக்கெட்
மாட்ச்!

கோடி கோடியாகச்
சம்பாதித்தாலும்...



அழைப்பு மணியை அழுத்தியதும், கதவைத் திறந்த தென்றலைப் பார்த்து, ''குழந்தாய்.... நீயா ஃபெமினா மிஸ் இண்டியா வர்ல்ட்?'' என்று கேட்குமளவுக்கு நமக்கு வயசு பத்தவில்லை! இல்லாவிட்டால் அந்த சாக்லேட்முக அழகியை தூக்கிக் கொண்டு "சோ... ஸ்வீட்" என்று கொஞ்சத்தான் தோன்றும். மாசு மருவற்ற பளீர் முகம், மின்னல் சிரிப்பு, துடி இடை, துடிப்பான நடை... கலகலவென்று மெர்க்குரிப் பூக்கள் சிதறினாற்போன்ற பேச்சு... பக்கத்திலேயே அம்மா; (அம்மாவா? அக்காவா?) ஒரு தமிழ் நண்பர் (இண்டர்ப்ரெட்டர்?).

தந்தை இந்தர்முகி கார்மெண்ட் பிசினஸ் செய்ய, தாய் "grooming work-shop" நடத்த, ஒரே தம்பி VJTIயில் கம்ப்யூட்டர் என்ஜினியரிங் படிக்கிறார் (எதிர்கால மிஸ்டர் இண்டியா?).

யுக்தா வென்றதில் முழுவண்டு காரர்களுக்கு ஏக மகிழ்ச்சி! கேபிளில் 'யுக்தா விசிட் செய்த ப்யூட்டி



# சாக்லேட் அழகியுடன் ஒரு சந்திப்பு!

பார்லர்' 'யுக்தா சென்ற செருப்புக் கடை' என்றெல்லாம் விளம்பரம் வரும்! சில கடைகளில் வாழ்த்துச் செய்திகள் கூட வைக்கப்பட்டிருந்தன.

டி.வி.யில் கழுத்தைச் சுளுக்கிப் பார்க்க வேண்டியிருந்ததே! (4½ இன்ச் ஹீலாமே?) நேரில் கண்ணுக்கெட்டிய உயரத்திலிருந்தார்.

**கேள்வி : யுக்தா என்றால்?**

பதில் : திட்டமிடுதல் என்று அர்த்தம்.

**கே : அழகிப் போட்டிக்கு எப்போதிருந்து திட்டமிட ஆரம்பித்தீர்கள்?**

ப : இரண்டு வயதிலிருந்தே! எப்போதும் கண்ணாடி முன்னால் ட்ரெஸ் பண்ணிக் கொண்டு, நகை எல்லாம் மாட்டிக் கொண்டு நிற்பேனாம்... அம்மா சொல்வாள்... ஏழெட்டு வயசிலே மாகஸீன்களில் வரும் அழகிகள், நடிகைகள் ஃபோட்டோக்களை கண் கொட்டாமல் பார்ப்பேனாம். சினிமா ஹீரோயின்களாக கற்பனை செய்தது அடுத்த பருவம். விவரம் தெரிந்தது முதல் 'ஃபெமினா மிஸ் இண்டியா' போட்டியே என் பல வருட இலக்கு, தாகமாக மாறியது.

**கே : உங்கள் வீட்டில் உடனே பர்மிஷன் கொடுத்து விட்டார்களா?**

ப : ஹூம் அதெங்கே? 'பாக்'கிலிருந்து பார்டிஷன் காலத்தில் 'இந்தியா வந்த பஞ்சாபிக் குடும்பம் எங்களுடையது. 'முகி' என்ற எங்கள் குடும்பப் பெயர், 'முக்யா'- (ஊர்த் தலைவர்) என்ற அடைமொழியிலிருந்து வந்ததுதான். பெரும்பாலும் கூட்டுக் குடும்பம் தான்; ஆண்கள்தான் படித்து, தொழில் புரிவார்கள். பெண்கள் கட்டுப்பெட்டிகள் தான். என் அம்மா, அவர் பிறந்த வீட்டில் சுதந்தரமாக வளர்ந்தவர் என்பதால், என்னையும் என் தம்பியையும் சுய சிந்தனையாளர்களாக வளர்த்தார். என் அப்பாவுக்கு அவ்வளவாக உடன்பாடில்லை; இரண்டு வருடம் முன்பு இப் போட்டியில் நான் கலந்து கொள்ள விரும்பியபோது, அம்மாவும், "உனக்குப் போதிய முதிர்ச்சி இல்லை" என்று தடுத்து விட்டார். இம்முறை நான் பிடிவாதம் பிடித்து, பர்மிஷன் கொடுக்காவிட்டால் படிப்பிலும் (மூன்றாமாண்டு, விலங்கியல்) கவனம் சிதறும் என பயமுறுத்தி, கெஞ்சி, அடம்பிடிக்க, என் ஆர்வத்தையும் முனைப்பையும் பார்த்து அம்மாதான் அப்பாவை 'கன்வின்ஸ்' செய்தார்.

**கே : அப்புறம்?**

ப : போட்டிக்கு ஃபோட்டோக்களை அனுப்பினேன்; நிறைய பேர் அழைக்கப்பட்டனர்; ஃபைனலிஸ்டாக இடம்பெற, என் உயரமும், 'பப்ளிக் ஸ்பீக்கிங்' கொடுத்த தன்னம்பிக்கையும் பெரிதும் உதவியது. நான் எட்டு கிலோ அதிகமிருந்ததால், கஷ்டப்பட்டு டயட் கன்ட்ரோல் செய்து எடையைக் குறைத்தேன். அப்புறம் அவர்களே ஒரு மாதம் பயங்கர 'ட்ரெயினிங்' கொடுத்தார்கள். எப்படி உட்காருவது, நடப்பது, பேசுவது, சிரிப்பது என்பதிலிருந்து, நமது இந்தியப் பண்பாடு, கலாசாரம், ஆன்மீகம், பொது அறிவு வரை நிறைய சொல்லித் தந்தார்கள். தினமும் முலுண்டிலிருந்து ஜுஹு வரை பயணித்துத் திரும்புவதிலேயே உயிர் போய்விடும்! அங்கே ட்ரில் வாங்கிய பிறகு, வீட்டிலும் பேப்பரை எல்லாம் ஒரு வரி விடாமல் படித்து, BBC பார்த்து, உலக ஞானத்தை 'அப்டேட்' செய்து கொள்ள வேண்டும். ஆடித்தான் போய் விட்டேன். ஆனால் உழைப்பு வீண் போகவில்லை!

**கே : வெற்றி நிச்சயம் என எதிர்பார்த்தீர்களா? அல்லது மற்ற அழகியரைக் கண்டதும் வயிற்றுக்குள் பூகம்பம் வெடித்ததா?**

ப : பூகம்பமில்லை; ஆனால் சிறு கலக்கமில்லாமலில்லை. அதுவும் சென்னை போட்டியில் ஒவ்வொருவரும் பேரழகியாகத் தெரிய, என் அம்மாவுக்கே நடுக்கமாகி விட்டது. ஃபோனில் நண்பர்களெல்லாம் தைரியப் படுத்தினார்கள். ஆனாலும் மனசுக்குள் ஒரு தீவிர நம்பிக்கை...

**கே : இந்தக் காலத்தில், பெண்களுக்கு "பெண்மை"யை போதிக்க வேண்டியிருப்பதாகச் சொல்லப்படுவதெல்லாம்...**

ப : விதண்டாவாதம்.

**கே : பெண்மை என்பது...**

ப : கருணைமயமான கம்பீரம்.

**கே : அதெப்படி இம்முறை நீங்கள் யாரும் மதர் தெரஸாவை துணைக்கழைக்கவில்லை?**

ப : ஸபீரா மர்சென்ட், ட்ரெயினிங் கொடுக்கும்போதே வார்னிங்கும் கொடுத்து விட்டார், 'அனாவசியமாக, அந்த மூதாட்டியை வம்புக்கிழுக்காதீர்கள்' என்று! 'சமூக சேவையில் நாட்டமிருந்தால் மட்டுமே அது பற்றிப் பேசுங்கள்; சும்மா புருடா விடவேண்டாம்; உண்மையாயிருப்பதில்தான் அழகு' என்றார்.

**கே : ஆனால் உண்மையாய் இருக்கிறேன் பேர்வழி என்று, கடைசி சுற்றில் ஒரு பெண் "என் அப்பா (பில் கிளின்டனான பட்சத்தில்) கேர்ள் ஃப்ரெண்டு வைத்துக் கொண்டால் என்ன? அது அவர் சொந்த விஷயம்; நான் தலையிடமாட்டேனென்றது...."**

ப : நமது கலாசாரத்துக்கு ஒத்து வராததால்தானே வெற்றியை இழந்தார்?

**கே : ஏன் நீங்கள் ஒருவருமே உங்கள் அப்பாவுக்கு (பில்) 'பதவியை விட்டு இறங்கு' என்று அட்வைஸ் கொடுக்கவில்லை?**

ப : ஒரு மகளுக்கு, தன் பெற்றோர் ஒற்று

மையாகக் குடும்பம் நடத்துவதில்தானே அதிக அக்கறை இருக்கும்? பதவி எல்லாம் அரசியல் சம்பந்தப்பட்டது. நாமெதையாவது சொல்லப் போய், இந்தியாவுக்கும் யு.எஸ்.ஸுக்கும் இருக்கும் உறவுகள் இன்னும் பாதிக்கப்பட்டால்...? அட, மிஸ் யுனிவர்ஸ் போட்டிக்கு யு.எஸ். போக நேர்ந்தால்... ஏன் வீண் வம்பு?

**கே : திருமணத்தில் நம்பிக்கையுண்டா?**

ப : உண்டு; ஒரு நல்ல துணை, வாழ்க்கைப் பாதையில் அன்பு மலரச் செய்ய அவசியம்தான்; ஆனால் தற்சமயம் அதைப் பற்றிச் சிந்தனையில்லை.

**கே : மாடலிங், டி.வி. சீரியல், சினிமா என்று இனை பரப்ப ஆசைதானே?**

ப : ஆசைதான்; மாடலிங் வாய்ப்புகளை ஃபெமினாவே பார்த்துக் கொள்ளும்; மற்றவை வரும்போது பார்த்துக் கொள்ளலாம்.

**கே : படிப்பை விட்டு விட மாட்டீர்களே?**

ப : விலங்கியல் முடித்துவிட்டு, மாஸ் கம்யூனிகேஷன்ஸ், கம்ப்யூட்டர் எல்லாம் படிக்கத் திட்டமிட்டுள்ளேன். ஆனால் போர்க்கால ஆயத்தம், நவம்பரில் நடக்க இருக்கும் உலக அழகிப் போட்டியில் வெற்றி இலக்குதான்.

**கே : அந்தப் போட்டியில் உங்களுடன் "மோத"ப் போவது யாராக இருக்குமென நினைக்கிறீர்கள்?**

ப : பொதுவாக வெனிஸுலாக்காரர்கள் பேரழகிகள். சின்ன வயசிலிருந்தே ட்ரெயினிங் உண்டே? ஆனால் சென்ற முறை முதல் சுற்றிலேயே வெனிஸுலா அழகி தேறவில்லை!

**கே : மது சாப்ரே போட்டியிட்ட போது, வந்திருந்த அழகிகளை எல்லாம் பார்த்துவிட்டு, பயந்தடித்துக் கொண்டு அப்பாவுக்கு ஃபோன் செய்தாராமே? நீங்கள் அந்த ரகமா?**

ப : இல்லை, இல்லை. ஐஸ்வர்யா, டயானா எல்லோருமே, மற்றவர்களிடமில்லாத ஒரு தனியழகு இந்தியப் பெண்களிடம் உண்டு என்றிருக்கிறார்களே! அதுதான் உள்ளத்திலிருந்து ஊற்றெடுக்கும் 'அன்பு'! மனித நேயத்துடன் இந்தியப் பெண்களால் பழக முடிவதற்கு, பெற்றோர், உற்றார், உறவினர் என்ற குடும்பச் சூழலில் அவர்கள் வளர்வதே காரணம். நீதிபதிகளும் இதைத்தான் பெரிதும் மதிக்கிறார்கள்.

**கே : அழகிப் போட்டி எல்லாம் செல்வந்தர் வீட்டு சமாசாரமென்பது...**

ப : உண்மையில்லை; ட்ரெயினிங்குக்கு 10,000 ரூபாய் கட்ட வேண்டும்; என் கவுனுக்கு ஸ்பான்ஸர்ஷிப் கிடைத்து விட்டது; மற்றபடி அதற்கென பத்தோ இருபதோ டிசைனரைப் பொறுத்து செலவழிக்க நேரலாம். தினம் ஒரு ட்ரெஸ்ஸில் பவனி வந்து, ஒரு லட்சத்தைக் கரைப்பவர்களுமுண்டு; ஒரே ஜீன்சை போட்டு அடித்து, வெளுத்துக் கட்டுபவர்களும் உண்டு; ஆனால் பங்கெடுத்துக் கொள்பவர்களுக்கெல்லாம் போட்ட பணம், பரிசுகள் வாயிலாகத் திரும்பக் கிடைத்துவிடும். வெற்றி பெறுபவர்களுக்குப் பன்மடங்காகும்... அவ்வளவே!

**கே : வெற்றி பெற்றபின் சுற்று வட்டாரத்தில் 'மவுசு' கூடியிருக்குமே...**

ப : அப்படியெல்லாமில்லை; நான் படித்த ஜே. ஜே. ஸ்கூல் ஆண்டு விழாவில் அழைத்து கௌரவித்தது சந்தோஷமாயிருந்தது; நான் படிக்கும் கேல்சர் காலேஜின் ப்ரின்சிபல், லெக்சரர்கள் வாழ்த்தினார்கள். என் ஃப்ரெண்ட்ஸுக்கு ஒரே ஸர்ப்ரைஸ்! நான் போட்டியிடுவதை யாரிடமும் சொல்லவேயில்லை...



**"யூரோ டாலரா இருந்தாலும் பரவாயில்லே, போடுங்கம்மா!"**

**– எஸ். மோகன்**

**கே : காலேஜிலுள்ள ஆண் நண்பர்கள்...**

ப : என்னுடன் பேசவே கூச்சப்படுவார்கள்; நானும் ரொம்ப 'ஷை' டைப்!

**கே : திடீரென்று "ஸெலிப்ரட்டி ஸ்டேடஸ்" தொலைந்து போனால்...**

ப : சுயமரியாதையுடன் வாழவே விரும்புவேன்.

**த**ங்கம், வெள்ளி, பித்தளை, இரும்பு, செம்பு என்ற ஐந்து உலோகங்களினால் ஆன (– இவரது டிசைனர் ஸுமா ரோய்க்கு பரிசு வாங்கித் தந்த –) அந்தப் பிரத்யேக கவுனைப் பற்றிப் பேசிக் கொண்டே தம் க்ரீடத்தை எடுத்துக் காட்டினார். அவர் இதயத்தைப் போலவே அது 'ப்ரைட்டா'கவும் 'லைட்'டாகவும் இருந்தது!

**— ஜெ.ஆர்.**



# 'ஸ்ருதி' முதல் 'சாமுத்ரி' வரை

தில்லியிலும், பம்பாயிலும் மட்டுமே இருக்கும் ஒரு வசதி, சென்னையிலும் இனி கிடைக்க, பிள்ளையார் சுழி போட்டிருக்கிறார் 'ஸ்ருதி' மாத இதழை நடத்தும் என். பட்டாபிராமன்.

- இசை - நடனம் பற்றிய ஆவணங்கள், தகவல்கள், புகைப்படங்கள், ஆடியோ-வீடியோ காசட்டுகள், நூல்கள் எல்லாம் ஒரே இடத்தில் கிடைக்க வேண்டும்.
- இசை - நடனக் கலைகளை ஆராய்ச்சி பூர்வமாக அணுகி, அலசிப் பார்த்து, தெளிவாக எடுத்துச் சொல்லிப் பதிய வைக்கிற அறிவியல் ரீதியான அணுகுமுறையில் செயல்பட வேண்டும்.
- இசை தெய்வீகமானது என்று ஒரே போடாகப் போட்டு, கொஞ்ச நஞ்சம் அதில் ஆர்வம் காட்டுகிறவர்களைக்கூட ஒரு வழி பண்ணி விரட்டி விடுவது போன்ற பயமுறுத்தல்களுக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும்.

● இந்தக் கலைகளில் பழைமை மட்டும் போதாது. புதுமையும் உருவாக வேண்டும். அதற்குக் கற்பனை வளமும், கருத்துப் பரிமாற்றமும் அவசியம். அதற் கேற்ற சூழலை உருவாக்கி, ஆராய்ச்சி யாளர்களின் துணையோடு செயல்பட வேண்டும்.

● இசை - நடனக் கலைகள் குறித்த பிரச்னைகளுக்கும், சிக்கல்களுக்கும் தீர்வு காணும் வகையில் அமைப்பு இருக்க வேண்டும்.

● அயல் நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் பயனடைவது மட்டுமன்றி, அயல்நாட்டு இசை - நடன வல்லுநர்கள் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளும் வகையில் அது அமைய வேண்டும்.

● இளைய தலைமுறையினர் நம் பாரம்பரியக் கலைகளில் ஆர்வம் கொள்ளும் வகையில், அவர்களுக்கு ஏற்ற மாதிரி, விஷயங்களை சி.டி.க்களில் டிஜிடல் முறையில் உருவாக்கிக் கொடுக்க வேண்டும்.

- என்றெல்லாம் 'ஸ்ருதி' பட்டாபி ராமனுக்கு ஏராளமான 'சின்னச் சின்ன' ஆசைகள்.

''எம்.எஸ்.ஸின் 81வது பிறந்த நாளன்று, Subbulakshmi Sadasivam Music & Dance Resources Institute (SAMUDRI) என்ற அமைப்பை நிறுவ வேண்டும் என்று எனக்குத் தோன்றிற்று. இதே யோசனை, என் நண்பர் ஒருவருக்கும் தோன்றியதுதான் ஆச்சரியம். தம் பெயரை வைக்க முதலில் எம்.எஸ். தயக்கம் காட்டினார். தாம் பெரிதாக எதையும் சாதிக்கவில்லையே என்றார். ஆனால் அமைப்பின் நோக்கங்களை விளக்கியவுடன், இசை - நடனக் கலைகள் மீதும், இளைய தலைமுறை மீதும் பெரிதும் அக்கறை கொண்ட எம்.எஸ். ஒப்புதல் கொடுத்தார்.

''சுருதி ஃபவுண்டேஷன் ஒரு தனி அமைப்பாக இருந்துகொண்டு வெற்றிகர மாகச் செய்த பல ஆய்வுப் பணிகள் தந்த அனுபவம், 'சாமுத்ரி' தொடங்க ஓரளவு தைரியம் கொடுத்தது!'' என்றார் பட்டாபிராமன்.

மாமல்லபுரத்துக்கு 10 கி.மீ முன்னால், சிறுதாவூரில் ஒன்றரை ஏக்கர் பரப்பளவு நிலத்தில் அமையவிருக்கும் 'சாமுத்ரி' துவக்க விழாவுக்கு, செம்மங்குடி, டி.கே. பட்டம்மாள், வைஜயந்தி மாலா, டி.டி. வாசு, சி.வி. நரசிம்மன் என்று இசை - நடன உலகப் புள்ளிகள் வந்து வாழ்த்தினார்கள்.


• சாமுத்ரி இப்படித்தான் இருக்கும்...

''காலரிகள், நிகழ்ச்சிகள் நடந்த அரங்கம், ஆராய்ச்சியாளர்கள் தங்க விடுதிகள், ஊழியர் குடியிருப்பு எல்லாம் அமையும். எல்லாம் ஒழுங்காக நடக்கிறதா என்று கண்காணிக்க ஒரு மேற்பார் வையாளர் குழு இயங்கும். இதற்கு தேசிய அளவில் பிரபலமான ஒருவர் தலை வராக இருப்பார்!'' என்று சின்ன சஸ்பென்ஸுடன் கூறினார் பட்டாபி ராமன்.

சாமுத்ரி துவக்க விழாவில் எம்.எஸ்.ஸின் வாழ்க்கையை ஒரு சிறப்பு இசை நிகழ்ச்சியாகத் தயாரித்து வழங் கினார் ரேவதி சங்கரன்.

— சித்தார்த்




# விற்பனைக்குத் தயார்!

ஆளும் கட்சிப் பிரமுகர்கள் தவிர எதிர்க்கட்சிப் பிரமுகர்களுக்கும் வஞ்சனை இல்லாமல் பிரித்துக் கொடுத்து விடுகிறார்கள். இது ஒரு பக்கம் இருக்க, முன்பு 'யமஹா' மோட்டார் சைக்கிள்கள் அடிக்கடி திருட்டுப் போனது போல சென்னையில் சுமோ வண்டிகள் திருட்டுப் போவது அதிகரித்து வருகிறதாம். யமஹா இன்ஜின்களை 'புலிகள்' படகுகளுக்குப் பயன்படுத்துவதால் திருட்டுகள் நடந்தன என்று முன்பு சொன்னார்கள். சுமோ விவகாரம் என்னவாம்?

● அரசு நிதியுதவிப் பள்ளிகளில் (Govt. aided School) ஆங்கில மீடியம் படிக்கும் மாணவ மாணவிகளிடமிருந்து ஆண்டுக்கு தலா முப்பது ரூபாய் வசூல் செய்து அரசுக்குக் கட்ட வேண்டும் என்று ஓர் ஆணை பிறப்பித்தார்கள். சில காலம் கழித்து அந்த ஆணை அரசுப் பள்ளிகளுக்கும் பொருந்தும் என்று சுற்றறிக்கை அனுப்பினார்கள். ஆனால் பல பள்ளிகளுக்குச் சுற்றறிக்கை வராததால் அந்தப் பள்ளிகளின் தலைமையாசிரியர்கள் மாணவ மாணவிகளிடம் முப்பது ரூபாய் வசூலிக்கவில்லை. இப்போது நினைவுக் கடிதம் அனுப்பி பழைய பாக்கியைக் கேட்டபோதுதான் அரசுப் பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களுக்கு அந்த ஆணையைப் பற்றி தெரிய வந்திருக்கிறது. "படித்து முடித்து மாணவர்கள் போய்விட்ட பின் யாரிடம் வசூலிப்பது? சில பள்ளிகளுக்கு லட்சக் கணக்கில் கட்ட வேண்டுமென்று நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். "பழைய பாக்கியை சொந்தப் பணத்திலிருந்து கட்ட வேண்டுமாம்" என்று கடுப்புடன் சொன்னார் ஒரு தலைமையாசிரியர். நீதி கேட்டு கோர்ட்டுக்குத்தான் போகப் போகிறார்களாம்.

● டாட்டா சுமோ வண்டிகள் பெருகி விட்டன. ஆயிரக்கணக்கில் பேருந்து சேஸி ஆர்டர் செய்யும் மாநில அரசுகளை கார் நிறுவனம் கருணையுடன் கவனித்துக் கொள்கிறது. பத்து சேஸி வாங்கினால் ஒரு டாட்டா சுமோ இலவச இணைப்பாம்.

● த.மா.கா.வின் முக்கியப் பிரமுகர்கள் இரண்டு பேர் சமீப காலங்களாக கட்சி நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபடாமல் ஒதுங்கியிருக்கிறார்கள். "நமக்கு தனி ஆவர்த்தனம் தேவையில்லை. தாய்க்கட்சியுடன் இணைவதே தமிழகத்துக்கும் நாட்டுக்கும் நல்லது" என்பது அவர்கள் வாதமாம். தென்கோடி எம்.பி. ஒருவரும் இந்தப் பிரமுகர்களின் பக்கம் இருக்கிறாராம். "சரியான கருத்துதான். ஆனால் நமது கௌரவத்துக்குப் பங்கம் வராமல், உரிய மரியாதை கொடுத்தழைத்தால் இணைந்து விடலாமே" என்று தலைமைக்கு நெருங்கியவர்கள் சொல்கிறார்களாம்.

● மோசடி செய்யும் நிதி நிறுவன அதிபர்களின்மேல் கிரிமினல் நடவடிக்கை எடுக்க வகை செய்கிறது சட்டம். ஆனால், வங்கிகளில் எத்தனை கடன் வாங்கி ஏமாற்றினாலும் அவர்களின் மேல் சிவில் நடவடிக்கைகள் தான் எடுக்க முடியும் என்கிற நிலை. வங்கிப் பணம் என்பது பொது மக்களின் பணம். அப்படிப்பட்ட பணத்தை ஏமாற்றுபவர்களின் மேலும் கிரிமினல் நடவடிக்கை எடுக்க வேண்டாமா? அதுதானே நியாயம்! இது பற்றித் தீவிரமாக யோசித்து வருகிறதாம் அரசு!

● அப்பாடி.... தோழிகள் ஒருவழியாக முடிவு செய்து விட்டார்கள் ராசியில்லாத சபையர் தியேட்டர் விற்பனைக்குத் தயாராகி விட்டது!

— சஞ்சயன்

## காதில் விழுந்தவை

# 300 ரூபாய்களுக்கு கே.வி.ஆர் ஆர்ட் கோர்ஸ் ஃப்ரீ

# இதை இலவசமாக பெறும் அதிர்ஷ்டசாலிகள் 50,000

## சுலபமாக படம் வரைய கற்றுத்தரும் சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் இது

இப்படி, இப்படி, இப்படி

இப்படி, இப்படி, இப்படி

1ல் இருந்து 12 எண்களில் படம்

சித்திரம் வரைவது சிலருக்கு ஹாபி. சிலருக்கு அது தொழில். எந்த வயதிலும் வீட்டிலிருந்தபடியே சுலபமாகக் கற்றுக் கொள்ள முடியும். 300/- ரூபாய் மதிப்புள்ள இந்த கோர்ஸ் இலவசமாகத் தரப்படும். விளம்பரத்திற்காக இவ்வாறு கோர்ஸ்களை ஃப்ரீயாக அளிப்பதில் கே.வி.ஆர் ஒரு ரெக்கார்டை ஏற்படுத்தியுள்ளது. மற்றவர்கள் எவரும் இவ்வாறு அளிப்பதில்லை. அதனால் உடனே இதை உபயோகித்துக் கொள்வதில் ஆர்வம் காட்டுங்கள். இந்த நல்ல வாய்ப்பை உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள்.

### 5 கோர்ஸ்கள்

1. ஈஸி டிராயிங் கோர்ஸ்
2. ஈஸி கார்ட்டூன் கோர்ஸ்
3. ஈஸி அனாடமி கோர்ஸ்
4. ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ்
5. கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ்

5 கோர்ஸ்கள்

### இந்த கோர்ஸ்கள் ஃப்ரீ

இனி உங்கள் வீட்டில் அனைவரும் சுலபமாக படம் வரையலாம்

இந்த ஃப்ரீ கோர்ஸை தினமும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அனுப்ப வேண்டியிருக்கும். அதனால் இந்த ஃப்ரீ கோர்ஸ் உங்களை வந்தடைய குறைந்தது 10 நாட்கள் நீங்கள் காத்திருக்க வேண்டி இருக்கும்.

### கே.வி.ஆர். சிம்பிள் ஆர்ட் கோர்ஸ் தனித்துவம்

• எவராலும் சுலபமாக படம் வரைய கற்றுக்கொள்ளமுடியும். "டிரிக் ஃபோட்டோ கிராபியைப் போல • டிரிக் டிராயிங்"கிற்கான சூட்சுமங்கள் • ஹாபி, பணம், புகழ், பெருமை, அனைத்தும் கிட்டும். • மொத்தம் 5 ஆர்ட் கோர்ஸ்கள் அடங்கிய ஆர்ட் கோர்ஸ் பேக்கேஜ் இது.

### இலவசமாக இவ்வாறு கோர்சை பெற்றுக் கொள்ளுங்கள்

• இந்த பத்திரிகையிலுள்ள கூப்பனில் உங்களது விவரங்களை எழுதி அனுப்புங்கள். • ஜெராக்ஸ் மற்றும் கார்டுகளின் மீது எழுதியவற்றை ஏற்றுக்கொள்ள முடியாது. • ஒரு கோர்ஸை இலவசமாக பெற ஒரு கூப்பனை அனுப்பவும். • உங்களுடைய நண்பருக்குத் தாவிரும்பினால் மற்றொரு பத்திரிகையை வாங்கி, அந்தக் கூப்பனை பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். • கவர் மீது 3ரூ ஸ்டாம்பை தற்பொழுதைய விலைமதிப்பின்படி ஒட்டவேண்டும். • கூப்பனில் உள்ள நியமம், நிபந்தனைகளின் படி இந்த ஃப்ரீ கோர்ஸ் அளிக்கப்படும். • முதலில் அனுப்பும் 50 ஆயிரம் பேருக்கே இது அளிக்கப்படும். • இந்த கோர்ஸ் முழுவதும் இலவசம். ஆனால் இதை பெற்றுக்கொள்ளும் செலவுகளை நீங்களே ஏற்க வேண்டும்.

### கூப்பனை பூர்த்தி செய்து உடனே அனுப்பவும்

**K.V.R. INSTITUTE** 333

(Tamil Free Art Course Scheme)

**P.B. No. 1020, 77. Habibullah Road, T. Nagar, Chennai - 17.**

எனக்கு ரூ. 300 விலை மதிப்புள்ள கே.வி.ஆர். ஈஸி டிராயிங் கோர்ஸ், ஈஸி கார்ட்டூன் கோர்ஸ், ஈஸி அனாடமி கோர்ஸ், ஜாமெட்ரிகல் ஆர்ட் கோர்ஸ், கமர்ஷியல் ஆர்ட் கோர்ஸ் பேக்கேஜை ஃப்ரீயாக அனுப்பவும். தபால் செலவு + பேக்கேஜ் + ஃபார்வார்டிங் + விளம்பர செலவுகளுக்கு ரூ 100ஐ தபால்காரரிடம் செலுத்தி எனது ஃப்ரீ கே.வி.ஆர் சிம்பிள் மொத்தம் இந்த 5 கோர்ஸ்களின் 'சிம்பிள் ஆர்ட் கோர்ஸ்' பாக்கெட்டை பெற்றுக் கொள்வேனென்று உறுதியளிக்கிறேன். இந்த ஃப்ரீ கோர்ஸ் வாய்ப்பளித்ததற்காக உங்களுக்கு நன்றி.

(உங்களது விலாசத்தை நன்கு புரியும்படியாக ஆங்கிலத்தில் எழுதவும். இல்லாவிடில் கோர்ஸை அனுப்ப முடியாது)

Name ..............................

Address ..............................

..............................

.............................. Pincode

# 1 மாதா, பிதா,

**மாதா, பிதா, குரு என்று சொல்லுவதுதானே மரபு. அதை மாற்றி மாதா, பிதா, மாணவன் என்று சொல்லுகிறேனே என்று ஆச்சரியப்படுகிறீர்களா? மாணவன் என்பவன் கற்றுக் கொள்ள வருகிறவன் மட்டுமில்லை. அவ்வப்போது ஆசிரியருக்கே பாடம் சொல்லிக் கொடுப்பவன் என்பது என்னுடைய தீர்க்கமான கருத்து. மாணவர்களை நான் குருவின் நிலையில் வைத்துப் பேசுவது அவர்கள் நம்மைச் செம்மைப்படுத்தக் கூடியவர்கள் என்பதால் மட்டும் அல்ல... மாணவப் பருவம் என்பது உயிர்த்துடிப்பும் தேடலும், கல்வித் தாகமும் நிரம்பிய பருவம். அந்த வயதில் நமது பொறுப்பில் விடப்படும் செல்வங்களை ஆக்கிரமித்து அடக்குவதைக் காட்டிலும் அக்கறையுடன் வழி காட்டுவதே நல்லது என்பதை உணர்ந்தேன். இந்த அணுகுமுறையை மேற்கொள்வோருக்கு மாணவர்களிடம் நிச்சயமாக ஒரு மரியாதை பிறக்கும். கலைஞனுக்குக் கலையிடம் உள்ள மரியாதை போல, எழுத்தாளனுக்கு எழுத்திடம் உள்ள மரியாதை போல...**

பள்ளிக்கூடத்தில், பசங்கள் கேள்வி கேட்டால், 'வாயை மூடிக்கொண்டு உட்கார்!' என்று நான் அடக்கி விட மாட்டேன். அவர்கள் மேலும் மேலும் கேள்விகள் கேட்கத் தூண்டுவேன். புதிய யோசனைகளை மாணவர்கள் சொல்கிறபோது, அவற்றைப் பாராட்டி அவர்களை உற்சாகப்படுத்துவேன்.

சில சமயங்களில் அற்பமான விஷயங்கள் குறித்துக்கூட அவர்களுடைய சந்தேகங்கள் இருக்கலாம். 'இதுகூடவா உனக்குத் தெரியாது! முட்டாள் பயலே!' என்று சொல்லி விட்டால் போச்சு! மனம் புண்பட்டு, அடுத்ததடவை, அவனுக்கு ஒரு பெரிய புரியாத விஷயம் குறித்து சந்தேகம் வரும்போது, அவன் எழுந்து கேள்வி கேட்கத் தயங்குவான். 'நாம் கேட்கும் விஷயம் ரொம்ப சின்னதோ, இதைக் கேட்டால் நமக்கு முட்டாள் பட்டம் கிடைத்து விடுமே!' என்று பயப்படுவான். இந்தத் தயக்கமும் பயமும், மாணவர்களைக் கேள்வி கேட்க விடாமல் கட்டிப் போட்டு விடும். இது நாளடைவில் அவனுடைய படிப்பைப் பாதிக்கும். ஆக, மாணவர்கள்





# மாணவன்

கேள்வி கேட்டால், அவர்களுக்குப் பொறுமையாய் பதில் சொல்ல வேண்டும். மேலும், மேலும் அவர்களை கேள்விகள் கேட்க ஊக்கப்படுத்த வேண்டும். சில சமயங்களில், அவர்கள் கேட்கிற கேள்விகளுக்கு, நமக்கு பதில் சொல்லத் தெரியாமல் போகலாம். அது மாதிரியான சமயங்களில் 'எனக்குப் பதில் தெரியவில்லை' என்று வெளிப்படையாய் ஒப்புக் கொண்டு விடுவேன். பிறகு அந்தக் கேள்வியை வகுப்பிலிருக்கும் மாணவர்களிடம் கேட்டு யாருக்குப் பதில் தெரிந்தாலும் ஏற்றுக் கொள்வதுண்டு. சில சமயம் சரியான பதில்கள் வரும். சில சமயம் விவாதங்கள் உருவாகும். பதில் கிடைக்காமலே போனால் சரியான பதில் என்ன என்பதைத் தெரிந்துகொண்டு, உனக்குச் சொல்லித் தருகிறேன்' என்று தேடிக் கண்டுபிடித்துச் சொல்வதுண்டு. மாணவர்களையும் தேடச் செய்வதுண்டு.

ரொம்ப வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் பத்தாம் வகுப்பிற்கு, ஜியோமெட்ரி பாடம் எடுக்க வேண்டிய டீச்சர் வரவில்லை என்பதால், சப்ஸ்டிடியூட்டாக நான் அந்த வகுப்புக்குப் போனேன். மாணவர்களுக்கு ஒரு கணக்கைக் கொடுத்து அதை எப்படிப் போட வேண்டும் என்று விளக்கிக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு மாணவன் எழுந்து "மிஸ்! இந்தக் கணக்கை வேறு ஒரு முறையிலும் போடலாமே!" என்றான். நான், உடனடியாக "அதெல்லாம் அவசியமில்லை! நான் சொல்கிற முறையில் போட்டால் போதும்!" என்று சொல்லி, அந்த மாணவனை உட்காரச் சொல்லி இருக்கலாம். ஆனால் நான் அப்படி செய்யவில்லை. அந்த மாணவனை முன்னால் வரச் சொன்னேன். அவன் கையில் சாக்பீஸைக் கொடுத்து "நீதான் இப்போது ஜியோமெட்ரி ஆசிரியர்! எங்கே, அந்தக் கணக்கை, இந்த வகுப்பில் உள்ள மாணவர்களுக்குச் சொல்லிக் கொடு பார்க்கலாம்!" என்று சொல்லி விட்டு, நானும் மாணவர்களோடு வகுப்பில் உட்கார்ந்து கொண்டேன். அந்த மாணவன் படிப்படியாக அந்தக் கணக்கைப் போடுவது எப்படி என்று விவரித்தான். அவனைப் பாராட்டி, அந்த மாணவனின் முன் உதாரணத்தை மற்றவர்களும் பின்பற்ற வேண்டும் என்று சொன்னேன்.

இன்று அந்த மாணவன் ஓர் அமெரிக்க பல்கலைக் கழகத்தில் கணிதப் பேராசிரியர்!

ஒருநாள், ஒரு வகுப்பில், ராமாயணம் பற்றிப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார் ஓர் ஆசிரியை. அவர் ரொம்பச் சாதுவான பெண்மணி. அதிர்ந்து பேசத் தெரியாது. பாடம் நடத்தி முடித்தபின், இந்தக் கதையிலிருந்து நீங்கள் கற்றுக் கொள்ளும் நீதி என்ன? என்று ஆசிரியை மாணவர்களைப் பார்த்துக் கேட்டார். ஒவ்வொரு மாணவரும், ஒவ்வொரு பதிலைச் சொல்லிக் கொண்டு வர, ஒரே ஒரு மாணவன் மட்டும் "அடுத்தவர் மனைவியை அபகரித்துக் கொண்டு போகக் கூடாது என்பதுதான் நாம் கற்றுக் கொள்ள வேண்டிய நீதி" என்று பதில் சொன்னான். அந்த டீச்சர், ஒரு மாணவனிடமிருந்து இப்படிப்பட்ட ஒரு பதிலை .எதிர்பார்க்கவில்லை. இந்தப் பதிலால் ரொம்பவே ஆடிப் போய் விட்டார் அவர்.

அந்த மாணவனை நேரே என்னிடம் அழைத்து வந்து 'நான் கேட்ட கேள்விக்கு

திருமதி ஒய்.ஜி.பி

இப்படியெல்லாம் வயசுக்கு மீறி பதில் சொல்கிறான்' என்று புகார் செய்தார். நான் அந்த மாணவனைப் பார்க்க, அவன் சாதாரணமாக கேள்விக்குப் பதில் சொல்லப் போய், இப்படி விபரீதமாகி விட்டதே என்று பயந்து விட்டான். கண்களில் கண்ணீர். நான் அந்தப் பையனிடம், "ராமாயணம் என்பது மிக உயர்ந்த காவியம். அது மக்களுக்கு போதிக்கும் நீதிகள் பல. அதில் நீ சொன்னதும் ஒரு நீதி. ஆனாலும் மற்ற நீதிகள் என்னென்ன என்பதையும் நீ தெரிந்து கொள்ள வேண்டும்" என்று சொல்லிவிட்டு அந்த டீச்சரிடம் திரும்பி, "ராமாயணம் போதிக்கும் நீதிகளுள் பாசிடிவ் ஆன சிலவற்றைப் போல, அடுத்தவர் மனைவியை அபகரித்தல் தவறு என்பது ஒரு நெகடிவ் ஆன நீதி. அதற்கு, நீங்கள் ஏன் இப்படிப் பதற்றப்பட வேண்டும்? அவனுக்கு எல்லாவற்றையும் விளக்கினால் புரிந்து கொள்ளப் போகிறான்!" என்று சொல்லி, அனுப்பி வைத்தேன்.

ஒரு டீச்சர், ஒரு வகுப்பின் நான்கு மாணவர்கள், அடிக்கடி பிற்பகல் வகுப்புகளுக்கு வராமல் லீவு போடுகிறார்கள் என்று புகார் கூறினார். நான் அந்த வகுப்பின் வருகைப் பதிவேட்டை வாங்கிப் பார்த்தேன். அந்த நாலு மாணவர்களும், வியாழக்கிழமைகளில் மட்டும் மதியம் வகுப்புக்கு வருவதில்லை என்று தெரிந்தது. வாராவாரம் வியாழக்கிழமை மதியம் மட்டும் லீவு போட என்ன காரணம் இருக்க முடியும் என்று யோசித்துப் பார்த்தேன். திடீரென்று ஒரு மின்னல் வெட்டியது. வியாழக்கிழமைகளில்தான் புதுப் படங்கள் ரிலீஸ் ஆகும். (இப்போது புதுப்பட ரிலீஸ் வெள்ளிக்கிழமைகளில் நடக்கிறது) இந்த மாணவர்கள் வகுப்பைக் கட் பண்ணி விட்டு, மேட்னி காட்சி சினிமா பார்க்கத்தான் போகக் கூடும் என்று முடிவுக்கு வந்தேன். ஆனால் இதை யாரிடமும் சொல்லவில்லை.

அடுத்த வியாழக்கிழமை, அந்த நாலு மாணவர்களும் வகுப்புக்கு மதியம் வராமல் இருந்தால், எனக்குத் தகவல் சொல்லச் சொன்னேன். நான் எதிர்பார்த்தபடியே அவர்கள் நாலுபேரும் ஆப்சென்ட். என் சக டீச்சர் ஒருவரையும் அழைத்துக்கொண்டு, காரில் புறப்பட்டேன். அன்றைய தினம் எந்தெந்த தியேட்டர்களில் புது சினிமாக்கள் ரிலீஸ் ஆகின்றன என்று பார்த்துக் கொண்டோம். முதலில் ஒரு தியேட்டருக்குப் போனோம். அந்த நாலு மாணவர்களும் கண்ணில் படவில்லை.

அடுத்துப் போனது, மவுண்ட்ரோடில் உள்ள ஆனந்த் தியேட்டர். காரை நிறுத்தி விட்டு அங்கிருந்த கூட்டத்தில் கண்களைச் சுழல விட்டேன். நாங்கள் தேடிக் கொண்டு வந்தவர்களில் இரண்டு பேர் மட்டும் ஓர் இடத்தில் நின்றுகொண்டிருப்பது தெரிந்தது. ஆனால் அவர்கள் என்னைக் கவனிக்கவில்லை. நான் நேரே அவர்களை நெருங்கினேன். சற்றும் எதிர்பாராத சூழ்நிலையில், என்னை அங்கே பார்த்தவுடன் இரண்டு பேரும் மிரண்டு போய் விட்டார்கள். 'டேய் 'Big missடா!' என்று சொன்னபடியே அந்த இடத்தை விட்டு ஓடப் பார்த்தார்கள். "ஓடாதீர்கள்! அப்படியே நில்லுங்கள்!" என்று ஒரு அதட்டல் போட்டேன். நின்றார்கள். மற்ற இருவரும் எங்கே என்றேன். டிக்கெட் வாங்குவதற்காக கியூவில் நின்றுகொண்டிருப்பதாய்ச் சொன்னார்கள். "இங்கே அந்த இரண்டு பேரையும் கூப்பிட்டுக் கொண்டு வா" என்று சொல்லி ஒருவனை மட்டும் அனுப்பி வைத்தேன். அந்த இரண்டு பேரும் அழைத்து வரப் பட்டனர். எதிரே நின்ற நான்கு மாணவர்களும் நடுங்கியபடி நின்றுகொண்டிருந்தனர். கண்களில் பயம்.

"இங்கே ஒரு 'நாடகம்' வேண்டாம் என்று பார்க்கிறேன்... என் பின்னாலேயே வாருங்கள்" என்று சொல்லி காரில் ஏற்றிக் கொண்டு பள்ளிக்கு வந்து சேர்ந்தோம்.

"ஏன் வகுப்பைக் கட் பண்ணிவிட்டு, சினிமாவுக்குப் போகிறீர்கள்?" என்று கேட்டதுதான் தாமதம். மூன்று மாணவர்கள் சேர்ந்துகொண்டு, ஒருவனைக் கைகாட்டி, "இவன்தான் கூப்பிட்டான். எங்கள் டிக்கெட், மற்ற செலவுகளைக்கூட இவன்தான் செய்வான்" என்று காட்டிக் கொடுத்து விட்டனர். மற்ற மூவரையும் கண்டித்து அனுப்பி விட்டு; காரணகர்த்தாவான பையனை மட்டும் இருக்கச் சொன்னேன்.

அவனிடம், சினிமாவுக்குப் போவது தப்பில்லை. அப்பா அம்மாவுடனோ, எப்போதாவது நண்பர்களுடனோ போகலாம். மாலை நேரத்திலோ, லீவு நாட்களிலோ போக வேண்டியதுதானே! இப்படி வகுப்புக்கு கட் அடித்துவிட்டு, வீட்டுக்குத் தெரியாமல், சினிமாவுக்குப் போவது தப்பில்லையா? இதனால் உன் படிப்பு பாழாகி விடாதா? நீ நன்றாகப் படித்து, பெரிய மனிதனாக வருவாய் என்று கனவு கண்டு கொண்டிருக்கும் உன் அப்பா, அம்மாவுக்குத் தெரிந்தால் வருத்தப்பட மாட்டார்களா? இப்படிச் செய்யலாமா?" என்று நான் கேட்க, பொல பொல

வென்று அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருக ஆரம்பித்து விட்டது.

"மிஸ்! என்னைப் பற்றி என் அப்பாவுக்கோ அம்மாவுக்கோ என்ன கவலை? என் அப்பா நாள் முழுக்க மதுபோதையில்தான் இருப்பார். அம்மாவுக்கோ சீட்டாட்ட கிளப் தான் முக்கியம். வீட்டில் இருக்கும் நேரங்களில் இரண்டு பேருக்கும் சதா சண்டை தான். ஆனால், என் செலவுக்கு, நிறைய பாக்கெட் மணி கிடைக்கிறது. நான் ஓட்டல், சினிமா என்று நண்பர்களை அழைத்துக் கொண்டு போய் செலவு செய்கிறேன்!'' என்றான் தழுதழுத்த குரலில்.

அவனது பிரச்னை எனக்குப் புரிந்தது. அவனது பெற்றோரை உடனடியாக என்னை வந்து சந்திக்கும்படி சொல்லி அனுப்பினேன்.

அவனது அப்பா பெரும் பணக்காரர். பெரிய பிசினஸ்மேன். அவரது மனைவியுடன் என்னைச் சந்திக்க வந்தார். "எதற்காக எங்களை வரச் சொன்னீர்கள்?" என்று கொஞ்சம் அதட்டலாகவே கேட்டார். நான், அவர் மகன் இன்னும் சில மாணவர்களைக் கூட்டிக்கொண்டு, வகுப்புக்குக் கட் அடித்து விட்டு சினிமாவுக்குப் போவதைச் சொன்னேன். அவருக்கு உடனே கோபம் வந்து விட்டது.

"அப்படியா? ஒழுங்காய்ப் படிக்காமல், வகுப்பைக் கட் பண்ணிவிட்டு, சினிமா போகிற அவனுக்குச் சரியான தண்டனை கொடுத்தால்தான் திருந்துவான்! அவன் வீட்டுக்கு வரட்டும்! என்ன பண்ணுகிறேன் பாருங்கள்!" என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்.

நான், "உணர்ச்சி வசப்படாதீர்கள்! அவன் ஒழுங்கான மாணவனாக இல்லை என்று தண்டிக்கப் போவதாய்ச் சொன்னீர்களல்லவா? நீங்கள் ஒரு நல்ல தகப்பனாராக அவனுக்கு இருக்கிறீர்களா? உங்கள் மனைவி, ஒரு தாயின் கடமையைச் செய்கிறாரா? உங்களுக்குக் குடிப்பதும் உங்கள் மனைவிக்கு கிளப்புக்குப் போவதும்தானே முக்கியமாக இருக்கிறது. அவனைப் பற்றி அக்கறைப்பட்டதுண்டா நீங்கள்?" என்று கோபமாய்க் கேட்டேன்.

''எனக்கு பிசினஸ்... பிஸி. இவள் கவனிக்கலாமில்லையா?'' என்று அவர் தமது மனைவி மீது குற்றம் சாட்டினார்.

"இவர் இருபத்து நாலு மணி நேரமும் மதுபோதையிலிருப்பவர்..." என்று மனைவி சொல்ல, "நான் ஒண்ணும் குடிப்பதில்லை!" என்றார் அவர்.

"பொய் சொல்லாதீர்கள். இப்போதுகூட நீங்கள் குடித்திருக்கிறீர்கள். உங்களிடமிருந்து வரும் வாடை அதைக் காட்டிக் கொண்டிருக்கிறது!" என்று நான் அவர்கள் வாக்குவாதத்தை இடை மறித்தேன்.

"உங்களுக்குப் பின், உங்கள் பிசினஸை, உங்கள் மகன் பொறுப்பேற்று நடத்த வேண்டாமா? இப்படி, அவன் சினிமா தியேட்டரைச் சுற்றிக் கொண்டிருந்தால், எப்படி அவன் முன்னேற முடியும்? பெரியவர்கள் பொறுப்புடன் நடந்து கொண்டால்தானே குழந்தைகளும் அவர்களைப் பின்பற்றி முன்னேற முடியும்"

"நீங்கள் குடிப்பதை நிறுத்த வேண்டும். உடனடியாக, மறுவாழ்வு மையத்தில் 'அட்மிட்' ஆகி, குடிப்பழக்கத்துக்கு விடை கொடுங்கள்..." என்று கணவரிடமும், "கிளப்புக்குப் போவதை நிறுத்துங்கள். உங்கள் பையனைக் கவனியுங்கள்" என்று மனைவியிடமும் கடுமையான குரலில் கூறினேன்.

உடனடியாய் அந்த மனிதர் மதுப்பழக்கத்திலிருந்து விடுபட அவசியமான சிகிச்சை பெற்று, புது மனிதரானார். அவரது மனைவி, கிளப்பைத் துறந்துவிட்டு, மகனைக் கவனித்தார். மகனும் நன்கு படித்தான். இன்று அந்தப் பையன் அமெரிக்காவில் பணி புரிகிறான்.

ஆனால் இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதில் கிடைத்ததுபோல் எல்லா சந்தர்ப்பங்களிலும் வெற்றி கிடைப்பதில்லை.

**(இன்னும் சொல்லுவேன்)**

---



''படம் ஏ சென்டர்ல நல்லா போகும்; பி சென்டர்ல சுமாரா போகும்; ஸி சென்டர்ல ஈ ஓட்டும்னு விநியோகஸ்தர்கள் சொன்னாங்களாம்...''

''அதுக்காக ஏரியாவுக்கு ஏத்தபடி ஹவுஸ்ஃபுல், ஹவுஸ், ஹாஃப், ஹவுஸ் குவார்ட்டர்னு பேர் வைக்கிறது நல்லா இல்லே!''

– பி. நிர்மலாதேவி

---



வட்ட மேஜை

# இந்த வரிக்கு எதுவும் ஈடாகாது!

✉ 'அவரைத் தம்முடன் அழைத்துக் கொள்வதற்கு அவர்களை (கொலைகாரர்களை) கருவிகளாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார் இறைவன்' என்ற வரிகளைப் படித்ததும் 'சொடேர்' என்று இதயத்தை சம்மட்டியால் அடிப்பது போலிருந்தது. 'தெய்வமே... எங்களை மன்னித்து விடு!' என்று ஒட்டுமொத்த இந்திய மக்களும் கதறினால்கூட திருமதி கிளாடிஸின் இந்த ஒரு வரிக்கு ஈடாகாது!

நல்லத்துக்குடி, கேவி. சூர்யா.

✉ "இந்திய நாட்டையும் இந்திய மக்களையும் நான் மிகவும் நேசிக்கிறேன். இது என்னுடைய பூமி. என்னுடைய மக்கள் இங்கேதான் இருக்கிறார்கள்" என்ற கிளாடிஸ் அவர்களின் வரிகள் நெஞ்சத்தை உருக்கி விட்டன. இப்படி நினைப்பவர்களுக்கும் கொடுமை செய்யக் கூடியவர்கள் இந்தியாவில் வாழ்கிறார்கள் என்று எண்ணும் போதுதான் வேதனை வாட்டுகிறது.

மயிலாடுதுறை – 4,
எல். துர்காதேவி.

✉ காதலர்கள் தினத்தை ஒட்டி வெளியான காதல் சிறுகதைகளும் ஜோக்ஸ்™ம் அமர்க்களமாய் இருந்தன.

குமராட்சி, எம். பிரபு.

✉ 'வெங்காயத்தை மறக்கலாமா...?' – தலையங்கம் 'வெகு ஜோர்...!' வெறும் வெங்காயத்தின் விலை உயர்வே இடைத் தேர்தல்களில் பி.ஜே.பி.க்கு கண்ணில் நீரை வரவழைத்தது. நடுத்தர, கீழ்த்தட்டு மக்களின் வயிற்றில் அடிக்கும் விதமாக இப்போது அத்தியாவசியப் பொருள்களின் தலையிலேயே கையை வைத்திருப்பது யானை 'தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வதற்கு ஒப்பானது...!

நெய்வேலி – 7, எஸ். கண்ணன்.

✉ செய்யும் தொழிலே தெய்வம் எனும் மனப்பான்மையுடன் செயல்பட்டால் வானம் கூட தொட்டு விடும் தூரம் தான் என்பதை மெய்ப்பித்துக் காட்டியது, விளம்பரப் பட இயக்குனர் ஜெயேந்திராவின் ஜெயித்த கதை.

திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்.

✉ 'சுமி சூப்பர் மார்க்கெட்' பக்கத்தில், வெ. சாமிநாத சர்மா பற்றிக் குறிப்பிடுகையில் "இவர் ஏன் கதை எழுதாமல் போனார்"னு சுமி கேட்டிருக்கிறார். வெ. சாமிநாத சர்மா கதை எழுதியிருக்கிறார். 1) கௌரி மணி (பௌராணிகக் கதை), 2. தலை தீபாவளி (சிறு கதைத் தொகுப்பு) ஆகிய இரண்டு நூல்கள் வெளியாகியிருக்கின்றன.

சென்னை – 82, து. லட்சுமிபதி.

✉ வாரியார் பூஜித்த முருகன் விக்கிரகத்தைப் பற்றிய செய்தியும், படமும் மெய்சிலிர்க்க வைத்து விட்டன!

மதுரை – 16, ஆர். லட்சுமி.

✉ "சின்னத் திரையில்..." என்ற பகுதியில் டாக்டர் மாத்ருபூதம், திருச்சி சித்த வைத்தியர் டாக்டர் கண்ணன் அவர்களின் நிகழ்ச்சியைப் பார்த்துவிட்டு 'சித்த வைத்தியம் செய்து கொண்டால் மாடுகள் போல் கொம்பு முளைத்து விடும்' என்று பயப்படுகிறார். சித்த வைத்தியம் என்பது தலைமுறை தலைமுறையாக உள்ளது. அலோபதி வைத்திய முறை இடையில் வந்ததே. நம் உணவிலேயே பல மருந்துப் பொருள்கள் சேருகின்றன. உதாரணம் பிரண்டை, கருவேப்பிலை, இஞ்சி, கீரை வகைகள். இது வரை இவற்றைச் சாப்பிட்டு வந்தவர்களுக்குக் கொம்புகள் முளைக்கவில்லை!

கங்காதபுரம், ஆர். ரங்கராஜன்.

✉ இவ்வார கல்கி கலெக்ஷனைப் படித்தபொழுது கல்கி அவர்கள் மீதிருந்த மதிப்பும், மரியாதையும் மிகவும் உயர்ந்து விட்டது. காரணம் நானும் ஒரு தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவன். இன்று நாங்கள் படும் கஷ்டத்தைவிட அன்றைய சமுதாயம் மிகவும் அனுபவித்திருக்கும் என்பதை கேள்விப்பட்டிருக்கிறேன். சற்றேறக் குறைய அறுபது ஆண்டுகளுக்கு முன்பு எங்களுக்காகக் குரல் கொடுத்து, அன்றைய சூழ்நிலையில் அரிஜன ஆலயப் பிரவேசத்தை 'என் ஆலயப் பிரவேசம்' என்று தலைப்பிட்டு எழுத என்ன துணிவும், மன உறுதியும் தேவை! இன்று நினைத்தாலும் வணங்கத் தோன்றுகிறது.

கோயமுத்தூர் – 12,
என். பாலசுப்பிரமணியன்.

✉ தற்போதைய நீதித் துறையின் சங்கடத்தை, கலக்கத்தை, வியப்பைத் தங்களின் கார்டூன் தெளிவாகக் காட்டியுள்ளது. நடைமுறையில் இப்படித் தானே நடந்து கொண்டிருக்கிறது?

"பை பையாய் பொன் கொண்டோர்
பொய் பொய்யாய்ச் சொன்னாலும்
மெய் மெய்யாய்ப் போகுமடி குதம்பாய்"

பொறுத்துப் பார்ப்போம். நீதிக்கு என்றும் தோல்வியில்லை. இதை வரலாறுகளே நிரூபித்துள்ளன!

சென்னை –75, பெ. தர்மன்.



# அருள்மிகு கிருபாலநாதர் மற்றும் வரதராஜப் பெருமாள் ஆலயங்கள், புத்தமங்கலம்.

## அமரர் கல்கி அவர்கள் பிறந்த கிராமம்

அமரர் கல்கி அவர்கள் பிறந்த கிராமமான புத்தமங்கலத்தில் (மயிலாடுதுறை வட்டம்) அருள்மிகு கிருபாலநாதர் மற்றும் வரதராஜப் பெருமாள் ஆலயங்கள் சிதிலமடைந்த நிலையில் உள்ளன.

அமரர் கல்கி அவர்களின் நூற்றாண்டு சமயத்தில் அவற்றைத் தமிழ்நாடு அறநிலையத் துறையின் ஒப்புதலுடன் புதுப்பிக்க முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

இத் திருப்பணிக்கு அறநிலையத் துறை ரூ. 9,20,000 மதிப்பீடு செய்து, அரசின் பங்காக ரூ. 4,50,000 வழங்குகிறது. மீதமுள்ள தொகையில் கல்கி குடும்பத்தினரும் நெருங்கிய உறவினர்களும் ரூ. 3,00,000 வழங்கியுள்ளனர். கும்பாபிஷேகச் செலவுகளும் இருக்கின்றபடியால் மேலும் இரண்டு லட்சம் ரூபாய் நன்கொடைகளாகப் பெறுமாறு அறநிலையத் துறை கோரியுள்ளது.

சென்ற ஜனவரி மாதம் 24-ம் தேதி திருப்பணி துவக்க விழாவும் பாலாலயம் அமைக்கும் நிகழ்ச்சியும் புத்தமங்கலம் கிராமத்தில் சிறப்பாக நடந்தேறின.

அமரர் கல்கி அவர்களிடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருக்கும் அன்பர்கள் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் பரவியிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் இந்தத் திருப்பணியில் பங்குபெற ஆர்வமாக இருக்கும். அவரவரும் அதிகபட்சமாகத் தங்களால் இயன்ற அளவில் நன்கொடை அனுப்பி அருள்மிகு கிருபாலநாதர் மற்றும் வரதராஜப் பெருமாள் திருவருளைப் பெறுமாறு வேண்டுகிறோம்.

தங்களுடைய நன்கொடையை மயிலாடுதுறையில் உள்ள எந்த ஒரு வங்கிக் கிளைக்கும் டிடி எடுத்து அனுப்பலாம். இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, மணல்மேடு கிளையில் (மயிலாடுதுறை வட்டம்) இதற்காகத் தொடங்கப்பட்டுள்ள கணக்கில் அது வரவு வைக்கப்படும்.

காசோலையை **(DD or cheque), "IOB, Manalmedu, A/C No. 13874, Thirupani Nidhi, Kripalanadar Temple"** என்ற பெயரில் எடுத்து பின்வரும் விலாசத்துக்கு அனுப்பி வைக்கவும். நன்றி.




**கி. ராஜேந்திரன்,**
**தலைவர் : புத்தமங்கலம் திருக்கோயில்கள் திருப்பணிக் குழு.**
**பதிப்பாளர், கல்கி நிறுவனப் பத்திரிகைகள்,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை – 600 097.**


**03.02.99**

# ஆஹா அக்கப்போர்!

நாகஸ்வரச் சக்கரவர்த்தி (இந்தப் பட்டத்தை யூஸ் பண்ணாம வெறும பேர் போட்டா அவருக்குப் பிடிக்காதாம்) திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையோட வாழ்க்கை வரலாறு படிச்சேன். (ப. சோழநாடன்/ரிஷபம் பதிப்பகம், பிளாக் 31/4.5 ராணி அண்ணா நகர், சென்னை - 78) மனுஷன் என்ன ஒரு ராஜ வாழ்க்கை வாழ்ந்திருக்கார்! நாகஸ்வரத்துக்கு சபை மரியாதை கிடைக்க ஆரம்பிச்சதே, அதை பிள்ளை வாசிக்க ஆரம்பிச்சதுக்கப்புறம்தான். அஞ்சு மனைவிகள், ஒரு கச்சேரிக்கு பத்தாயிரம் ரேட் (நைன்டீன் ஃபார்டீஸ்ல!), வைரக் கடுக்கன், ஜரிகை ஜாலங்கள், இத்தனை ஜபர்தஸ்தும் - அவர் ஒருத்தரைத் தவிர வேற யாருக்குப் பொருத்தமா இருந்திருக்க முடியும்? அவர் வளர்த்த கலையோட கம்பீரம் அப்படி!

பிஸ்மில்லாகான் கிட்டேயிருந்து (முன்ன பின்ன பரிச்சயமில்லாமலே) ஷெனாயை வாங்கி அசத்தலா வாசிச்சிக் காண்பிச்சு "சந்தேகமில்லாம நீங்க சக்கரவர்த்திதான்"னு கான் சாகிபே பாராட்டினது, அடியாள் வேஷம் போட்டு என்.எஸ். கிருஷ்ணன் கூட ஃப்ளூட் மாலி வீட்டுக்குப் போய் ரகளை பண்ணினதுலேருந்து ஆரம்பிச்சி, டி.கே.சி. வீட்டுல அவருக்காக ஸ்பெஷல் கச்சேரி நடத்தினது, கடைசி காலத்துல குடிச்சுக் குடிச்சே நொடிச்சுப் போனது வரைக்கும் (குழந்தை இல்லாத சோகத்தாலதான் குடிக்க ஆரம்பிச்சாராம்) ரொம்ப அழகா 'ஸ்கெட்ச்' பண்ணியிருக்கார் சோழநாடன்.

ராஜரத்னம் பிள்ளைன்ன உடனே தோடி ஞாபகம்தான் வரும். இந்தப் புஸ்தகத்துல கோடி விஷயம் அவரைப் பத்தி இருக்கு.

* * *

**ரசிகர் கடிதம் - 1**

'பயனுள்ள பல விஷயங்களை மலருக்கு மலர் நாடிப் போய், தேனீ போல் சுறுசுறுப்பாக வாசகர்களுக்கு உற்சாகமாகவும் உபயோகமாகவும் அளிக்கும் சுமி'யேன்னு பறக்கும் ரயில் நீளத்துக்கு ஒரு ஆரம்ப ஸென்டன்ஸோட கார்டு போட்டிருக்கும் ஈரோடு சௌந்தர்ராஜனாரே! (கொஞ்சம் இருங்க, மூச்சு வாங்கிக்கறேன்) உங்க லெட்டர் கிடைச்சது; ரொம்ப தேங்க்ஸ். (முதல் வரி பாராட்டுக்கு)

சௌந்தர்ராஜன் கிட்ட 1900 வருஷம் பப்ளிஷ் பண்ணப்பட்ட 'சத்யவான் சாவித்ரி' கதைப் புஸ்தகம் இருக்காம். (அவர் பாஷைல, 'பல புரட்சிக் கருத்துகள் நிரவி (என்ன ஒரு சொல்!) இருக்கின்றன'வாம்.)

இதை எதுக்குக் குறிப்பிட்டிருக்கார்னே புரியலை. எனக்கு அதை அன்பளிப்பா தர விரும்பறாரா, படிச்சுட்டு, திருப்பித் தரணுங்கறாரான்னு தெரியலை.

But 99 வருஷத்துக்கு முந்தைய அழகுத் தமிழை லேசா நம்ம ரீடர்ஸ்க்கு அறிமுகப் படுத்தலாம் - அனுப்பி வெச்சார்னா.

**ரசிகர் கடிதம் - 2**

'டியர் சுமி, இந்த column ஆரம்பிச்சு ஒரு வருஷம் ஆகப் போறதே. ஆனிவர்ஸரியை எப்படி ஸெலிபரேட் பண்ணப் போறே'ன்னு கேட்டு - இது வரைக்கும் நானே யோசிக்காத ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்தியிருக்கார் மேல்பாதி மங்கலம் கண்ணபிரான் கலையரசு. (ஒருத்தரா? ரெண்டு பேரா?)

கண்டிப்பா ஸெலிபரேட் பண்ண வேண்டியதுதான். இன்னும் கொஞ்ச நாள் டைம் இருக்கு இல்லை? தீவிரமா யோசிச்சி பிரமாதமா ஒரு மேளா நடத்திடலாம். (அந்த வாரம் மட்டும் சுமிக்காகத் தனியா ஒரு சப்ளிமென்ட் போடச் சொல்லி கல்கி எடிட்டருக்கு லட்சக்கணக்குல லெட்டர் போட்டுட மாட்டீங்க!)

* * *

தி. நகர் நடேசன் பார்க்குக்கு சாயங்கால வேளைல (இருட்டினப் புறம்) எப்பவாச்சும் போய்ப் பார்த் திருக்கீங்களா? ஜகஜ்ஜோதியா இருக்கு அந்த பார்க். சுமாரான பராமரிப்பும் இருக்கறதால நல்ல கூட்டம் வருது. காதலர்கள் ஒரு பக்கம், (ஸாரி, எல்லா பக்கமும்) கணவன் - மனைவிகள் ஒரு பக்கம். ரிடையர்டு ஸிடிஸன்ஸ் ஜமா ஒரு பக்கம், விளையாட்டுப் பையன் கள் ஒரு பக்கம். இது போக, எங்கியோ பாம் வெச்சிட்டாங்களோன்னு கலவரம் மூட்டறாப்பல பரபரன்னு ஓடற, நடக்கற (எக்ஸர்ஸைஸ்!) கூட்டம் ஒரு பக்கம்.

நல்லா இருட்டினப்புறம் கவிஞர் இன்குலாப் யோசிச்சிக்கிட்டே பார்க்கை சுத்தி வரார். கொஞ்சம் உத்துப் பார்த்தால் அங்கங்க பல கவிஞர்கள், எழுத்தாளர்கள் கண்ணுல படறாங்க. (யார் கண்ணுலயும் படாம உலாவ ரொம்பவே சிரத்தை எடுத்துக் கறாங்க.)

ஒரு மூலைல இளம் எழுத்தாளர் கள் கோஷ்டி ஒண்ணு – ஓரளவு எனக் குப் பரிச்சயமானவங்க – கண்ணுல பட, போய் உட்கார்ந்து காது குடுத் தேன். இலக்கிய உலக 'அரசியல் வாதிகள்' பத்தி வாங்கு வாங்குன்னு வாங்கிட்டிருந்தாங்க.

பிரபலத்துக்கு அலையற எழுத் தாளர் ஒருத்தர், தனக்குன்னு ஒரு சிஷ்யகோடி கும்பல் சேர்க்கப் படாத பாடு பட்டுட்டிருக்கறதைத் தமாஷா சொல்லிட்டிருந்தார் ஒரு எழுத்தாளர். விருது கொடுக்கற அமைப்புகளை நார் நாரா கிழிச்சார், இன்னொருத்தர். சமீபத்துல ஒரு தனியார் நிறுவனப் பரிசு பெற்ற எழுத்தாளரைக் குறிப் பிட்டு, "அவர் பரிசு பெறலை; வாங்கி னார்"னு ஒரு போடு போட்டாங்க. என்னடா சமாசாரம்னு விசாரிச்சா, பரிசுக்காக எப்படியெல்லாம் குழா யடிக்கறதுன்னு ஒரு தீஸிஸ் அளவுக்கு 'டெக்னிக்ஸ்' எடுத்து விடறாங்க! பரிசு குடுக்கறவங்களும் சரி; வாங்கறவங் களும் சரி – ஒருத்தருக்கு ஒருத்தர் சொறிஞ்சி விட்டுக்கற சான்ஸ் இருந் தாலொழிய அங்கீகாரம் கிடையாதாம். இலக்கியத்தை விடவும் இலக்கிய உலக அக்கப்போர்கள் எப்பவுமே சுவா ரஸ்யம்தான்!

— சுமி

# சின்னத்திரையில் பார்த்தது!

● ஈ – டிவியில் ஒரு பரத நாட்டிய நிகழ்ச்சியைப் பார்த்ததும் தலையில் அடித்துக் கொள்ளத் தோன்றியது. ஜீன்ஸ் அணிந்து கொண்டு ஆடினார்கள். இதென்ன அசிங்கம்? ஒவ்வொரு கலைக்கும் ஒரு வித கௌரவம் உண்டு. அதை மீறுவது கொடுமை.

● மூன்று நான்கு சீரியல்களில் குடிகாரக் கணவன் பாத்திரத்தைப் பார்க்க முடிந்தது. குடும்பத் தலைவன் மது குடிப்பதையும், மட்டமான வார்த்தைகளைப் பயன்படுத்துவதையும் வெகு விவரமாகக் காண்பிக் கிறார்கள். இது தேவையா? குடியின் 'அருமையை' அந்தப் பாத்திரம் விளக்குவதைக் கேட்டு நிகழ்ச்சியைப் பார்க்கும் இளம் உள்ளங்கள் கெட்டுப் போனால்? டி.விக்கு ஒரு சென்சார் தேவை.



- பேராசிரியர் குந்தளா ஜெயராமன் விமர்சிக்கிறார்!

● டிஸ்கவரி சேனல், நேஷனல் ஜியோக்ரபிக் இரண்டுமே அற்புதமான சானல்கள்தான். என்றாலும் கொஞ்சம் குறைவான 'கிம்மிக்'குகள், தொழில் நுட்பம் மட்டுமல்லாது சரித்திரப் பின்னணியையும் தெளிவாகத் தருவது ஆகியவற்றில் நேஷனல் ஜியோக்ரபிக் சற்று முன்னணியில் இருக்கிறது.

● கார்ட்டூன் நெட்வொர்க்கைப் பார்க்கும் போதெல்லாம் பாராட்டும் கூடவே, ஒருவித குறுகுறுப் பும் தோன்றுவதுண்டு. ராமாயணம், மகாபாரதம் போன்ற வற்றையெல்லாம் கார்ட்டூன் சீரியலாகக் கொண்டு வந்தால் குழந்தைகள் விரும்புவார்களே? இப்படி நம் மிடையே பொக்கிஷமான கதைகள் இருக்கும் போது வெளிநாட்டு சரக்குகளை மட்டுமே பார்த்துக் கொண் டிருக்கிறோமே!

● ஏஷியாநெட்டில் ஓர் அருமையான கதகளி நாட்டிய நாடகத்தைப் பார்க்க முடிந்தது. பொதுவாகவே கலை நிகழ்ச்சிகள், வினாடிவினா போன்றவை இந்தச் சானலில் தரமாகவே உள்ளன.

● கல்லூரியில் பல வருடங்களாகப் பணியாற்று பவள் என்கிற வகையில் மாணவர்களிடம் சில ஜோக்குகள் நிலவினாலும் – சீரியஸான பல எண்ணங் கள் உண்டு என்பது எனக்குத் தெரியும். ஆனால் டி.வி நிகழ்ச்சிகளில் வரும் கல்லூரி மாணவர்கள் முழுவதும் அசட்டுத்தனமான ஜோக்குகளோடு, கனவுலகில் வாழ்வதாகவே காட்டப்படுகிறார்கள்!

— ஜி.எஸ்.எஸ்.

# ஜெயித்த கதை!



மிகப் பெரிய சமஸ்கிருதப் பண்டிதரின் மகனாகப் பிறந்த நானும் ஒரு பண்டிதனாகப் போயிருக்க வேண்டியவன் தான். பள்ளி நாட்களில் சமஸ்கிருதம் கூடப் படித்தேன். ஆனால் நான் பிறந்து வளர்ந்த கும்பகோணம் என்னை எழுத்துப் பக்கம் இழுத்து வந்து விட்டது.

அங்கேதான் கு.ப. ராஜகோபாலன் இருந்தார். பிச்சமூர்த்தி இருந்தார். ஜானகிராமனும், கரிச்சான்குஞ்சுவும் இருந்தார்கள். தேவன் கூட எங்கள் ஊர்க்காரர்தான். ஜானகிராமனும் தேவனும் என் தந்தையிடம் படித்தவர்கள். போதாக்குறைக்கு எங்கள் பக்கத்துத் தெருவில் ஓவியர் கோபுலு வேறு குடியிருந்தார். இப்படி ஒட்டு மொத்தமாகக் கலைஞர்கள் வசித்த ஊரில் இருப்பவனுக்குச் சிறகு முளைத்து விடாதோ? பிறகு, படிப்புதான் வருமா?

என் தந்தை 'மகாமகோபாத்தியாய' ஆர். வி. கிருஷ்ணமாச்சார்யார், கண்டிப்பான கல்லூரிப் பேராசிரியர். பெரிய கலா ரசிகர். ஆனால், அந்தக் காலத்தில் நான் ஆனந்த விகடன் படிப்பதை அவர் விரும்பி அனுமதிக்க மாட்டார். இலக்கியம் படிக்கலாம். சமஸ்கிருதம் கற்கலாம். பாடங்களை ஒழுங்காகப் படித்து விட வேண்டும், அவருக்கு.

என் பதினாறாவது வயதில் அவர் இறக்கும்வரை, அவர் விரும்பிய வண்ணம் தான் நான் வாழ்ந்தேன்.

பதினேழு வயதில் இன்டர்மீடியட் போனபோது சுத்தமாகப் படிப்பார்வம் காணாமல் போய் விட்டது. 'இனி படிக்க மாட்டேன்' என்று வீட்டில் அடம்பிடித்தேன். தந்தைக்குப் பின் குடும்பத்தைச் சுமந்து கொண்டிருந்த என் மூத்த சகோதரர் என்னை அன்பாகப் பேசித் திருத்தப் பார்த்

– சொல்கிறார், பத்திரிகையாளர் ரா. கி. ரங்கராஜன்

தார். கோபமாகக் கத்தி மிரட்டிப் பார்த்தார். அடித்துக் கூட வழிக்குக் கொண்டு வரப் பார்த்தார். கேட்கிறவனா நான்?

படிப்பை நிறுத்தி விட்டு, பத்திரிகை நடத்த ஆரம்பித்தேன்; கையெழுத்துப் பத்திரிகை.

அந்தப் பதினேழு வயதில் எனக்கிருந்தவை இரண்டே ஈடுபாடுகள். காந்தி மீது ஓர் ஈடுபாடு. சுத்தமாகக் கதர் அணிய ஆரம்பித்திருந்தேன். அடுத்தது, பத்திரிகை ஈடுபாடு. தொடங்கிய கையெழுத்துப் பத்திரிகைக்கு 'இளந்தென்றல்' என்று பெயர் வைத்தேன்.

பத்திரிகை தொடங்கிய முதல் காரியமாக மூதறிஞர் ராஜாஜிக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டேன் – 'இளந்தென்றலு'க்கு ஒரு கட்டுரை கேட்டு!

தமது நெருக்கடியான பணிகளுக்கிடையிலும் அவர் கட்டுரை எழுத நேரமில்லாதது பற்றிக் கடிதம் எழுதி விட்டு, பத்திரிகைக்கு ஒரு வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார். அது போதாதா!

சிறந்த எழுத்தாளரான எம்.வி. வெங்கட்ராம் அதில் ஒரு கதை எழுதியிருந்தார். கவிமணி ஒரு கவிதை தந்திருந்தார். அமர்க்களமான அட்டைப் படத்தை கோபுலு வரைந்து தந்தார்.

இதழ் தயாரானது. எனக்குப் பெருமை பிடிபடவில்லை. திருச்சியில் கையெழுத்துப் பத்திரிகைக்கென்றே ஒரு மாநாடு நடத்தினார்கள். சாப்பாடு போட்டு, இரண்டு நாள் உற்சவம். தமிழகத்தின் அனைத்து சிறந்த எழுத்தாளர்களும் ஆர்வமுடன் வந்து கலந்து கொண்ட அம்மாநாட்டுக்கு நானும் 'இளந்தென்றலை'த் தூக்கிக் கொண்டு போனேன். ஒவ்வொரு எழுத்தாளரிடமும் அதனைக் காட்டிப் பாராட்டுப் பெற்றபோது நெஞ்சில் நிறைந்த பூரிப்பை வர்ணிக்கத்தான் இயலுமா? நம் தொழில் இதுதான் – பத்திரிகைதான் என்று அப்போது உருவான தீர்மானம் அது! வீட்டில் எதிர்த்தாலும் விடுவதாக இல்லை என்று உறுதி பூண்டேன்.

கும்பகோணத்தில் சாது சேஷையா லைப்ரரி என்றொரு அருமையான நூலகம் உண்டு. அங்கேதான் நான் என் முதல் 'குரு'வைக் கண்டடைந்தேன்.

ஆனந்த விகடன் வால்யூம்களை அங்கே புரட்டிக் கொண்டிருந்தபோது அமரர் கல்கியின் இலங்கை பயணக் கட்டுரைத் தொடரை அதில் படிக்க நேர்ந்தது.

என்னைப் புரட்டிப் போட்ட எழுத்து அது! கடவுளே! இப்படிக் கூட சுவாரஸ்யமாக எழுத முடியுமா? என்ன மாய வித்தை இது! என்று வியந்து வியந்து படித்தேன். கல்கி, கல்கி என்று கல்கிப் பித்துப் பிடித்துக் கொண்டது.

'கல்கி திருச்சி வரப் போகிறாராம் – யாரோ நண்பர் வீட்டுக்கு' என்றொரு தகவல் காதில் விழுந்தது.

அவ்வளவுதான். கல்கிக்கு முன்னதாக நான் திருச்சி போய் விட்டேன். காரணமே இல்லை. அவரைப் பார்க்க வேண்டும்; அவ்வளவுதான்! போனேன்;



பார்த்தேன்; பேசினேன்; (பேசினேனா?) திருப்தியுடன் திரும்பி வந்தேன்.

வந்த சூட்டில் கல்கியின் எழுத்துகளை ஒன்று விடாமல்

படிக்க ஆரம்பித்தேன்.

சொற்களை எப்படிக் கையாள்வது என்பதை பாரதியிடமிருந்தும் கல்கியிடமிருந்தும்தான் கற்க வேண்டும். கருத்து ஒருபுறமிருக்க, ஓசை நயமுடன் இடத்துக்கேற்ப சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பொருந்துவதில், கவிதையில் பாரதியும் உரைநடையில் கல்கியும் மன்னர்கள்! பாரதியின் பாஞ்சாலி சபதத்தை, அவரது சொல்லாட்சிக்காகவே எத்தனை நூறு முறை படித்தேனோ, சொல்ல முடியாது!

இதனிடையில் என் மூத்த சகோதரர் என்னைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்திருந்தார். 'இவனைத் திருத்த முடியாது.'

அடிப்படையில் கும்பகோணத்துக்காரரான இலங்கை 'வீர கேசரி' இதழின் ஆசிரியர் 'வாஸ்', குடந்தை வந்திருந்தார்.

என் மூத்த சகோதரர், என்னை வீர கேசரியில் சேர்த்து விடுகிறேன் என்று சொல்லி, தூக்காம்பாளையத் தெருவில் திரு. வாஸ் தங்கியிருந்த வீட்டுக்கு அழைத்துப் போனார். (இருவரும் முன்பே பரிச்சயமானவர்கள்.)



''எங்க ஆபீசில சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு இல்ல...''
''என்ன சொல்ற?''
''லஞ்சம் வாங்கத் தயங்கறவங்களை மானேஜர் தண்ணி இல்லாத காட்டுக்கு மாத்திடுறார்!''
– அம்பை தேவா

என் பத்திரிகை ஆர்வம் பற்றி அவரிடம் என் அண்ணா எடுத்துச் சொன்னவுடனேயே அவர், "சந்தோஷமாக வா. வந்து சேர்ந்து விடு. ஆபீசிலேயே கேண்டீன் உண்டு. சாப்பாடு பிரச்னை கிடையாது. தங்குவதற்கும் நானே ஏற்பாடு செய்து விடுகிறேன். மாசச் சம்பளம் எழுபத்தைந்து ரூபாய். சரியா?" என்றார் உடனே.

இத்தனை சுலபத்தில் நான் பத்திரிகையாளனாகிவிடுவேன் என்று நினைக்கவேயில்லை.

மிகுந்த சந்தோஷமுடன் ஒப்புக்கொண்டு வீடு திரும்பினேன்.

அவரும் சொன்னபடி என்னைப் பணியில் சேர்த்துக் கொள்வதற்கான நியமன உத்தரவு, (இப்போது யார் இதெல்லாம் தருகிறார்கள்?) பயணத்துக்கான டிக்கெட், இலங்கை முகவரி என எல்லாவற்றையும் ஊர் போய்ச் சேர்ந்த உடனேயே மொத்தமாக அனுப்பி விட்டார்.

கிளம்ப வேண்டியதுதானே? வீட்டில் வெடித்தது பூகம்பம்!

அதெப்படி கடல் தாண்டிப் போகலாம் என்று தொடங்கி புதிது புதிதாகக் காரணங்களை அடுக்கி, நான் இலங்கை போகவே கூடாது என்று தீர்ப்புச் சொன்னார்கள் என் வீட்டார்! என் மேல் இரக்கப்பட்டு இதற்கு ஏற்பாடு செய்த என் மூத்த சகோதரருக்கும் நல்ல டோஸ்.

எப்படியும் இலங்கை போக விட மாட்டார்கள் என்று எனக்கு உறுதியாகத் தெரிந்தது. ஆகவே நான் போகாமலிருப்பதற்குக் 'காம்பன்ஸேஷனாக' நூறு ரூபாய் தரவேண்டும் என்று பேரம் பேசி வாங்கிக் கொண்டு ஜாலியாக சுற்றப் போய் விட்டேன். வேறென்ன? 'ஸ்பெஷல் அல்வா, டிகிரி காப்பி!

நூறு ரூபாயும் கரைகிற வரை ஒன்றும் பிரச்னை தராமல் இருந்தேன்.

மறுபடியும் நச்சரிக்க ஆரம்பித்ததும், கல்லூரிப் பேராசிரியரான என் அண்ணா, என்னை அழைத்துக் கொண்டு சென்னைக்கு வந்தார். ஏதாவது ஒரு பத்திரிகையில் என்னைச் சேர்த்து விடும் பொறுப்பை நான் அவர் தலையில் கட்டியிருந்தேன்.

**1946-**ம் வருடம். மே மாதம். சென்னையில் நான் நுழைந்த முதல் பத்திரிகை, ஆனந்த விகடன். ஆசிரியர் வாசன் என்னைப் பார்த்ததும், "கதை கிதை எழுதட்டும். பிறகு பார்க்கலாம்" என்று சொல்லி விட்டார்.

பிறகு என் மானசிக குருவான கல்கியவர்களிடம் அழைத்துப் போனார் என் அண்ணா.

"சின்னப் பையனா இருக்கானே" என்று அவரும் தயங்க, அடுத்தது கலைமகள்; கி.வா. ஜகந்நாதன். அங்கும் வேலை கிடைக்கவில்லை.

அன்றைக்குப் பத்திரிகை என்றால் விகடன், கல்கி, கலைமகள்தான். மற்ற பத்திரிகைகள் எதுவும் இந்த அளவுக்குப் புகழ்பெற்றவை அல்ல.

வேறு வழியில்லை. ஊர் திரும்ப வேண்டியதுதான் என்கிற சோகமான நிலையில் என் சகோதரரின் நண்பர் ஒருவர், "நீங்கள்

(தொடர்ச்சி 65-ம் பக்கம்)

ஹை! கம்ப்யூட்டரே சொல்லிடுச்சு... இனிமே கவலையில்லே...!

2000 ஆண்டில் அனைவருக்கும் நலவாழ்வு
சட்டமன்றத்தில் ஆளுநர் உரை




1999 பிப்ரவரி 28
வெகுதான்ய மாசி 16
மலர் : 57
இதழ் : 31

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டி பாப்பா - பாரதியார்.




## பீஹாரில் தலைவலி; ஒரிஸ்ஸாவில் திருகுவலி!

**லா**லு பிரசாதின் பினாமி ஆட்சியே நடந்து வந்த பீஹாரில் 356 என்கிற ஆயுதம் பிரயோகிக்கப்பட்டிருப்பதில் ஆச்சர்யமில்லை. அதிலும் அடுத்தடுத்து இருமுறை ரண்வீர் சேனா என்கிற 'தனியார் (உயர்ஜாதி) ராணுவம்' அக்கிரமங்கள் நிகழ்த்தி, அப்பாவி உயிர்களைப் பலிகொண்டதென்பது அப்போதைய மாநில அரசின் கையாலாகாத்தனத்தையே உணர்த்தும்.

356 ஆவது பிரிவை எச்சரிக்கையுடன் கையாள வேண்டும் என்று பேசும் மாநிலக் கட்சித் தலைவர்கள் கூட பீஹார் அரசு கலைக்கப்பட்டது நியாயமே என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் இந்த ஆட்சிக் கலைப்புக்கு முன்னும் பின்னும் நடந்த நாடகங்கள்தான் ரசக்குறைவாக இருக்கின்றன.

கடந்த ஆண்டு, செப்டம்பரில் ஏற்கெனவே ஒருமுறை பீஹார் அரசைக் கலைக்கக் கோரி குடியரசுத் தலைவருக்குச் சிபாரிசு செய்தது மத்திய அரசு. அப்போது கே. ஆர். நாராயணன், பெரும்பான்மை பலத்துடன் அமைந்துள்ள ஓர் ஆட்சியைக் கலைக்கச் சம்மதியாமல் கோரிக்கையை மறுபரிசீலனைக்கு அனுப்பி விட்டார். அதே தேதியிட்ட கோரிக்கையையே மீண்டும் குடியரசுத் தலைவரிடம் அனுப்பி, அதை அவர் மறுக்க இயலாத நிலைமையை உருவாக்கிவிட்டது பி.ஜே.பி அரசு. இந்த நடவடிக்கையை அரசியல் சாதுர்யம் என்பதைக் காட்டிலும் மத்திய அரசின் தன்னம்பிக்கையின்மை என்றே கருத வேண்டியிருக்கிறது.

பீஹார் சட்டம் ஒழுங்கை உன்னிப்பாகக் கவனித்து, ரண்வீர் சேனையினரின் அக்கிரமங்களுக்கும் ராப்ரி தேவி அரசின் செயல்பாடு இன்மைக்கும் வலுவான ஆதாரங்களை விரைவாகச்

சேகரித்து, குடியரசுத் தலைவருக்கு புதிய 'டிஸ்மிஸ் கோரிக்கை'யே அனுப்பியிருக்கலாம்.

அதை விடுத்து, குறுக்கு வழியைக் கையாண்டதன் மூலம் ஒரு நியாயமான காரியத்துக்கு அரசியல் சாயம் பூசப்பட இடமளித்து விட்டது பி.ஜே.பி.

போதாக்குறைக்கு பீஹார் ஆளுனர் சுந்தர் சிங் பண்டாரிக்கும் பி.ஜே.பி. தலைவர் அத்வானிக்கும் இடையேயான மனப்பிளவு இந்தச் சமயத்தில் பகிரங்கப்படுத்தப்பட்டிருக்கிறது.

அத்வானி அப்பழுக்கற்றவரல்ல என்று ஜெயின் டைரி விவகாரம் வெடித்தபோது சுந்தர் சிங் பண்டாரி குற்றம் சாட்டினாராம். 'பண்டாரி ஆர். எஸ்.எஸ்காரர். சங் பரிவாரைச் சேர்ந்தவர். இத்தகைய அரசியல் சார்பெல்லாம் இல்லாத வேறு ஆளுனரை நாங்கள் விரைவில் நியமிப்போம்' என அத்வானி கூற, பண்டாரி இதனை ஆட்சேபித்திருக்கிறார்! கோபத்தில் ஒருநாள் முழுதும் பணியாற்றாமல் கழித்திருக்கிறார். அன்றைய தினம் பாட்னா ராஜ்பவனில் ஒலித்த தொலை பேசியை எடுக்கக் கூட ஆளில்லை! இரண்டு மூன்று தினங்களுக்கு நிர்வாகமே ஸ்தம்பித்துப் போயிருக்கிறது!

என்ன காரணத்துக்காக ராப்ரி அரசு நீக்கப்பட்டதோ அதே நிர்வாகச் சீர்கேட்டுக்குப் புதிய சூழ்நிலையும் வழிவகுத்திருக்கிற அபத்தத்தைப் பார்க்கிறோம்.

பீஹாரில் ஏழாவது முறையாகக் குடியரசுத் தலைவர் ஆட்சி கொண்டுவரப்பட்டுள்ளது. ஆண்டுதோறும் ஐயாயிரம் கொலைகள், ஆயிரம் பாலியல் பலாத்காரங்கள், 2500 ஆள் கடத்தல்கள் என, கடந்த ஒன்பதாண்டுகளாக நடந்திருப்பதாகத் தெரிவித்திருக்கிறார் அமைச்சர் பிரமோத் மஹாஜன்.

மாநில அரசைக் கலைத்து விட்டால் போதுமா? பீஹாரில் மீண்டும் இந்த அவலங்கள் நிகழாமலிருக்க வேண்டுமானால் உடனடியாக ஆளுனரின் ஆலோசகர்களாக ஆற்றலும் உறுதியும் திடசித்தமும் கொண்ட, அரசியலுக்கு அப்பாற்பட்ட அதிகாரிகள் நியமிக்கப்பட வேண்டும். அவர்கள் அரசியல் தலையீடு இன்றி இயங்க அனுமதிக்கப்பட வேண்டும்.

நீண்ட கால நோக்கில், பீஹாரின் அடித்தள மக்கள் முன்னேற்றப்பட வேண்டும். அது நடவாத வரை அம்மாநிலம் அரசியல்வாதிகளின் விளையாட்டு மைதானமாகத்தான் விளங்கும்!




ஒரிஸ்ஸா முதல்வர் ராஜினாமா செய்வார் என்பது எதிர்பார்த்த செய்திதான். அச்செய்தி வெளியான சூட்டிலேயே ஹேமானந்த பிஸ்வால் அடுத்த முதல்வராக இருப்பார் என்ற அறிவிப்பும் வந்தது. காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள் கூடி அவரைத் தேர்ந்தெடுப்பார்கள் என்றும் காங்கிரஸ் மூத்த உறுப்பினர்களான மாதவ ராவ் சிந்தியாவும் பிரணாப் முகர்ஜியும் டெல்லியிலிருந்து வந்து புதிய முதல்வர் தேர்வு செய்யப்படுவது குறித்துக் கலந்துரையாடுவார்கள் என்றும் கூட செய்தி வந்தது.

ஆனால், அன்றைய தினசரிகளில் கரம் குவித்துப் புன்னகை செய்த பிஸ்வாலின் அதிர்ஷ்டம் அதோடு முடிந்து விட்டது.

ஒரிஸ்ஸா முதல்வர் பொறுப்பை ஏற்கும் கிரிதர் கோமங், ஜனநாயக முறைப்படி சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்களின் பெரும்பான்மை ஆதரவுடன் தேர்வு செய்யப்பட்டவர் அல்ல! அவர்கள் எல்லோருமே தங்கள் உரிமையை சோனியா காந்திக்கு தாரைவார்த்துக் கொடுத்துவிட, கட்சித் தலைவர் சோனியா காந்தியின் தனிப்பட்ட தேர்வினால் அப்பதவியை அடைந்திருக்கிறார் கோமங்.

காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்தில் இந்த அறிவிப்பை சோனியா வெளியிட்ட போது, நந்தினி சத்பதி தவிர ஏனையோர் மௌனம் காத்திருக்கிறார்கள்.

இந்த மௌனத்தை சம்மதத்தின் அறிகுறியாக எடுத்துக் கொள்வது எத்தனை அபத்தம் என்பதை சோனியா விரைவிலேயே உணர்வார்.

பட்நாயக் விலகலுக்கே கட்சிக்குள் எதிர்ப்பு இருந்திருக்கிறது. இப்போது பெரும்பான்மை உறுப்பினர்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்காமல் சர்வாதிகாரியாக சோனியா செயல் பட்டிருப்பதால் ஒரிஸ்ஸா காங்கிரஸில் மேலும் பிளவுகளும் பிரச்னைகளும் எதிர்பார்க்கலாம். மாநிலத்தில் நிர்வாகச் சீர்கேடு குறையாது; மேலும் அதிகரிக்கவே செய்யும் என்பது ஒருபுறமிருக்க, உட்கட்சி ஜனநாயகத்துக்கு காங்கிரஸின் புதிய தலைவியும் குட்பை சொல்லத் தயாராகி விட்டார் என்பது ஊர்ஜிதமாகிறது. தொடர்கிறது காங்கிரஸ் பாரம்பரியம்!

# உடனே கிடைக்கும்
## வர்த்தமானன் பதிப்பகப் புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சிவபுராணம் | (418 பக்கங்கள்) | 78.00 |
| 2. | திருமுறைத் தியானம் | (365 பக்கங்கள்) | 77.00 |
| 3. | பயன் தரும் பாராயணம் | (171 பக்கங்கள்) | 35.00 |
| 4. | சிவானந்த லஹரி | (92 பக்கங்கள்) | 20.00 |

இந்த நான்கு நூல்களின் மொத்தவிலை.... 210.00

**சிறப்புச் சலுகை விலை ரூ. 150.00 மட்டுமே !**

இந்தச் சலுகை மார்ச் 20 வரைதான் !!

**இந்நூல்களைப் பெறத்தாங்கள் செய்ய வேண்டியது இதுதான் !**

ஒரு அஞ்சலட்டையில் ''நான்கு நூல்களையும் அனுப்புக. ரூ.150.00 + தபால் செலவு, கட்டுச் செலவு ரூ.20.00 சேர்த்து ரூ.170.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்துகிறேன்'' என எழுதிக் கையொப்பமிட்டுத் தங்களது முழு முகவரியினை மறவாமல் தெளிவாக எழுதுக.

பெறுநர் இடத்தில் ''வர்த்தமானன் பதிப்பகம், ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்,
141, உஸ்மான் சாலை, தியாகராய நகர் சென்னை - 17.(பனகல் பார்க் அருகில்)
என எழுதி 20.3.99க்குள் எமக்கு அனுப்புக.

தங்கள் அஞ்சலட்டை கிடைத்ததும் 4 நூல்களும் VPPயில் அனுப்பப்படும். தபால்காரர் புத்தகக் கட்டினைத் தங்களிடம் தரும்போது **ரூ.170** மட்டும் செலுத்துக.

நேரில் பெறுவோர் கவனிக்க : எம் அலுவலகத்தில் (20.3.99க்குள்)**ரூ.150** மட்டும் கொடுத்து நூல்களை உடனே பெறலாம். அலுவல் நேரம் : 9.30 a.m. - 6.30 p.m. ஞாயிறு வார விடுமுறை.

நூல்களைப்பற்றிய விவரம்

மாணிக்கவாசகர் அருளிய

## 1. சிவபுராணம்

(திருவாசகத்தின் முதல் பகுதி)

அனுபவ விளக்கம் தருபவர் :

டாக்டர் அ. அறிவொளி M.A., Ph.D.,

இதுவரை சிவபுராணத்திற்கு இப்படியொரு விரிவான விளக்கம் வெளிவந்ததில்லை.

சிவபுராணத்தைக் கற்பார் உள்ளத்தே அப் பெருமான் என்றும் நிலையாகக் குடியிருப்பார். அன்பரிடத்தே அவரிலும் அன்பு கொள்வார். அப் பெருமான் தம் அன்பர்க்கு இன்பத்தை இடையீடின்றி அருளுபவர். பெருந் துன்பங்களையும் ஐந்தெழுத்து மந்திரம் போக்க வல்லது என்பதனை அனுபவ பூர்வமாக உணர்ந்து, அச்சம் உற்ற போதெல்லாம், அழுதழுது அப் பெருமானின் அருளைப் பெற்று அச்சம் அகன்றவர் மணிவாசகர்.

சொல்லின் பொருளைக் கற்றவர் எளிதில் உணர்வர். ஆயின், பொருளை உணர்தல் மட்டும் போதாது. அதனை அனுபவித்து உணர்தல் வேண்டும்.

திருவாசகப் பெருமையை ஓதி உணர்ந்து அனுபவமாகக் காட்டிய வள்ளலார், துறைமங்கலம் சிவப்பிரகாசர் முதலிய அருளியல் பெரியோர்களும் இந்த அனுபவத்தை உணர்ந்து கூறியவர்கள் ஆவர். **'நான் கலந்து பாடுங்கால்'** என வள்ளலார் கூறுவது, திருவாசகத்தில் அவர் பெற்ற அனுபவ இன்பமாகும் என உணர்க.

மனத்தால் தியானம் செய்வதால் அடைய முடியாதது எதுவும் இல்லை. கருதிய ஒன்றை அடைவதற்கு உரிய காலம் தேவைப்பட்டாலும், செய்தபோதே அமைதி மனத்திற்கும், ஆரோக்கியம் உடலுக்கும் உடனடியாகக் கிடைக்கின்றன.

யோக விளக்கமாகவும், ஞானப் புதையலாகவும் உள்ள சிவபுராணத்தை அதே இயல்பில் கண்டு அனுபவ விளக்கம் எழுதப் பட்டுள்ளது.

**நானேதும் அறியாமே என்னுள் வந்து**
**நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்**

என்ற அப்பர் பெருமான் கருத்துக்கு ஏற்ப முன்வினைப் பயனால் இப்புண்ணியப் பணியைச் செய்துள்ளார் டாக்டர் அறிவொளி அவர்கள். சுமார் 25 ஆண்டுகளாகச் சிவபுராணத்தை அடிக்கடி நினைத்தும் பேசியும் உணர்ந்தும் சிறந்திருந்த முயற்சி இன்று நூல் வடிவில் வந்துள்ளது.

இந்நூலை நாள்தோறும் ஒரு சிறிது படிப்பது என்று பழகிக் கொள்வது நல்லது. பயணத்தில் படிப்பது - பூசை அறையில் படிப்பது - அதிகாலையில் படிப்பது என்று இயலும் போது படிக்க ஒரு முறை செய்து கொள்வது நலம்.

மாணிக்கவாசக சுவாமிகள் சிவ புராணத்தை முடிக்கும்போது,

**சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து**
**சொல்பவர்கள் சிவனருள் பெறுவார்கள்''**

என்று கூறியுள்ளார்.

எனவே எல்லாம் வல்ல இறையருளால் இதைப் பயில்வோர், சிவபுராணத்திற்குரிய சிவபுண்ணியம் பெற்று இன்புறுவார்களாக.

---

# 2. திருமுறைத் தியானம்

# 3. பயன்தரும் பாராயணம்

**இவ்விருநூல்களின் தொகுப்பாசிரியர் :**
**செஞ்சொல்மணி, புலவர் பு.மா. ஜயசெந்தில்நாதன் எம்.ஏ.,**
**ஆஸ்தானப் புலவர் - ஸ்ரீசங்கரமடம், காஞ்சிபுரம்**
**(இந்நூலாசிரியர் திருமுறைத் தலங்கள் என்னும் நூலாசிரியர் என்பது குறிப்பிடத்தக்கது) .**

ஒவ்வொரு நாளும் பாராயணம் செய்வதற்கு ஏற்ற வகையில் ஜனவரி முதல் தேதி முதல் டிசம்பர் முப்பத்தொன்று வரை – 365 நாட்களுக்குரிய பாடல் - பொருள் 'திருமுறை தியானத்தில்' அடங்கி உள்ளன.

வாழ்க்கைக்குரிய பல்வகைப் பயன்களையும் அருள வல்ல பிரார்த்தனைப் பாடல்கள், சுலோகங்கள், திருமுறை, திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள், அன்றாடப் பாராயணப் பாடல்கள் முதலியவற்றின் தொகுப்பு 'பயன் தரும் பாராயணம்' என்னும் நூல்.

**இவ்விரண்டு நூல்களுக்கும் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமுகம் அளித்தது மேலும் சிறப்பாகும்.**

---

**ஆதிசங்கராசார்யார் அருளிய**

# 4. சிவானந்தலகரி

**மூலமும் உரையும்**

இந்தியப் பெருநாட்டின் தத்துவமாகவும், ஞானக் களஞ்சியமாகவும் விளங்குவது இந்நூல். இதனை அருளியவர் **ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத் பாதாள்** எனப் போற்றப்படும் **ஆதிசங்கராசார்யார்.** வடமொழியில் அமைந்த இந்நூல் தமிழ்ஆக்கம் செய்யப்பெற்றுள்ளது; உரையுடன் கூடியது. சிவம்– சாந்தம்–அத்வைதம் என்ற தத்துவத்தை அந்தரங்கமாக வைத்து தத்துவமஸி என்பதன் விளக்கமாக விளங்குகிறது, சிவானந்தலகரி என்பர் சான்றோர்.

இத்தோத்திரப் பாக்கள் ஆசைகளைப் பூர்த்தி செய்விக்கும் காமதேனுவாகவும், கொடுமையான நோய்களைப் போக்கும் அமுத சஞ்சீவியாகவும், சகல பாவங்களையும் போக்குவிக்கும் மகாமந்திரமாகவும், அருள்பாலிக்கும் கற்பக தருவாகவும் உள்ளன.

**மெய்யன்பர்கள் இந்நூல்களைக் கற்று நல்வாழ்வு எய்தி இன்புறுவார்களாக**

ADVT

**பீகாரில் குடியரசுத் தலைவர் ஆட்சி அறிவிக்கப்பட்ட பிறகு, ஜெயலலிதாவின் விருப்பத்துக்கு இணங்கி, தமிழ் நாட்டிலும் குடியரசுத் தலைவர் ஆட்சியை மத்திய அரசு அமல் செய்தால்...? இதோ, நம் கற்பனை:**

# ஜெ. ஆசை-பா.ஜ.க. நிறைவேற்றியது!

## ஆட்சிக் கலைப்பு ஏன்?

தமிழ் நாட்டில் கார்டு, கவர், இன்லண்ட் லெட்டர் எதுவும் தபாலாபீசுகளில் போதிய அளவுக்குக் கிடைப்பதில்லை என்றும், அதற்குக் கருணாநிதிதான் காரணம் என்றும் அ.இ.அ.தி.மு.க. பொதுச் செயலாளர் செல்வி ஜெயலலிதா குற்றம் சாட்டியிருக்கிறார். அவரைச் சமாதானப்படுத்த மத்திய பாதுகாப்பு அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸ், முப்பது அட்டைப் பெட்டிகளில் மேற்படி கார்டு-கவர் வகையறாக்களைச் சுமந்து கொண்டு போயஸ் கார்டனுக்கு வந்து, வாசலில் ஆறுமணி நேரம் காத்திருந்தார்.

பிறகு ஜெ.யைப் பார்த்து ஹலோ என்று சொன்னார். கார்டு, கவர் எல்லாம் மத்திய அரசு சம்பந்தப்பட்டவை என்றும், அதற்குக் கருணாநிதி பொறுப்பல்ல என்றும் விளக்கினார். அதனால் ஜெ. மேலும் கோபம் அடைந்தார். தபாலாபீசுகளில் போதிய கார்டு, கவர் கிடைக்காததால், பலரும் தங்கள் உறவினர்களுக்கு, வேண்டிய அளவு கூடக் கடிதங்கள் எழுத முடியாமல், அவர்களுக்குள் மனஸ்தாபம் வந்து விடுவதாகத் தெரிவித்தார் ஜெயலலிதா. இது சட்டம்-ஒழுங்கு பிரச்னையாகிவிடும் வரை காத்திருக்க வேண்டுமா என்று கேட்டார். பெர்னாண்டஸ் சுமந்து கொண்டு வந்த கார்டு-கவர்களை எல்லாம் அ.இ.அ.தி.மு.க. அலுவலகங்களில் இலவசமாக விநியோகம் செய்து மக்களுக்கு உதவ வேண்டும் என்றார். அதற்குச் சரி என்றார் பெர்னாண்டஸ். அடுத்ததாக உடனே, இதற்குக் காரணமாக இருந்த தி.மு.க. ஆட்சியை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்றார் ஜெயலலிதா. உடனே பெர்னாண்டஸ் திருதிருவென்று விழித்தார். தில்லி போய், பிரதமர் வாஜ்பாயைக் கலந்து ஆலோசித்துத்தான் அதைச் செய்ய முடியும் என்றார். உடனே ஜெ. படாரென்று கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போய் விட்டார்.

என்ன செய்வது என்று புரியாமல் விழித்துக் கொண்டிருந்த ஜார்ஜ் பெர்னாண்டஸிடம் கதவு இடுக்கு வழியாக, "தில்லி போன உடன் கருணாநிதியை டிஸ்மிஸ் செய்யவில்லை என்றால், ஆதரவு வாபஸ்!'' என்று கூச்சல் போட்டார்.

பெர்னாண்டஸ் அலறியடித்துக் கொண்டு வெளியே வந்து, காத்துக் கொண்டிருந்த பத்திரிகையாளர்களிடம், "உங்களிடம் டாடா சொல்லத்தான் தில்லியிலிருந்து வந்தேன்!" என்று சொல்லிவிட்டு, விமான நிலையம் நோக்கி விரைந்தார். ஜெயலலிதா வெளியே வந்து பத்திரிகையாளர்களிடம், "நாளை முதல் தமிழ் நாட்டில் குடியரசுத் தலைவர் ஆட்சி அமலுக்கு வரும். இன்னும் கொஞ்ச நேரத்தில் அதற்கான உத்தரவுகளை உங்கள் பத்திரிகை அலுவலகங்களில் பெறுவீர்கள்!" என்று அறிவித்தார்.

## சேடப்பட்டி ஆளுநர் ஆகிறார்; பாத்திமா பீவி மாற்றம்!

தமிழ் நாட்டில் இதுவரை ஆளுநராக இருந்த பாத்திமா பீவியை மேகாலயா ஆளுநராக இட மாற்றம் செய்து, குடியரசுத் தலைவர் அறிவித்திருக்கிறார். கருணாநிதி அரசு மீது குற்றப் பத்திரிகை தயாரித்து அவரைப் பதவி இறக்கப் பரிந்துரை செய்ய ஆளுநர் மறுத்ததால், அவரை மாற்றியதாக

பா.ஜ.க. தலைவர் வெங்கைய நாயுடு தெரிவித்தார். கருணாநிதி ஜெயலலிதாவை அநாவசியமாக மிரட்டிக் கொண்டே இருந்ததால், தங்களால் பொறுக்க முடியாமல் போயிற்று என்றார். முன்னாள் தமிழக சபாநாயகரும், முன்னாள் மத்திய அமைச்சரும், ஊழல் குற்றச் சாட்டுக்கு உள்ளாகி அமைச்சர் பதவியை இழந்தவருமான சேடப்பட்டி முத்தையாவை உடனே ஆளுநராக நியமிக்கும்படி ஜெயலலிதா பிரதமர் வாஜ்பாய்க்கு உத்தரவிட்டார். அதன்படி மத்திய அமைச்சரவை உடனே கூடி, சேடப்பட்டி முத்தையாவை தமிழக ஆளுநராக நியமித்தது. (பாத்திமா பீவி மேகாலயா போகத் தமக்கு வழியே தெரியாது என்று கூறி, கோபத்துடன் கேரளாவுக்கு விடுமுறையில் சென்று விட்டதாகத் தெரிகிறது.)

## சட்டம்–ஒழுங்கு நிலைமை திருப்தி!

தமிழ் நாட்டில் இப்போது சட்டம்–ஒழுங்கு மிகவும் திருப்திகரமாக இருப்பதாகவும், தங்கள் ஆட்சிக் காலத்தில் மக்களை மிரட்டிய கும்பல்கள் பழையபடி தைரியமாக வெளியே இப்போது நடமாடுவதால், மக்கள் எல்லாம் வீட்டை விட்டே வெளியே வராமல் இருப்பதாகவும், போக்குவரத்து நெரிசல்கள், பிக்பாக்கெட் தொல்லைகள் எதுவும் இல்லாமல் மக்கள் மகிழ்ச்சியாக இருப்பதாகவும் போலீஸ் டைரக்டர் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருக்கும் வால்டர் தேவாரம் செய்தியாளர் கூட்டத்தில் தெரிவித்தார்.



## போயஸ் கார்டன் ராஜ்பவன் ஆகிறது!

தம்மால் தினசரி ராஜ்பவனுக்கு வந்து ஆளுநருக்கு உத்தரவு போட முடியாது என்பதால், ஜெயலலிதாவின் விருப்பப்படி சேடப்பட்டி முத்தையா தினமும் காலை எட்டு மணிக்கே போயஸ் தோட்டத்தில் உள்ள ஜெ.யின் வீட்டுக்கு வந்து விடுகிறார். வந்தவுடன் ஜெ.யின் காலில் விழுந்து வணங்கி ஆசி பெற்றுக் கொள்கிறார். அவர் போடும் உத்தரவுகளை ஒவ்வொன்றாக நிறைவேற்ற ஆரம்பிக்கிறார். ஆளுநர் சேடப்பட்டி முத்தையாவுக்கு, ஆலோசகர்களாக ஐ.ஏ.எஸ். அதிகாரிகளான ஹரிபாஸ்கர், இன்பசாகரன் இருவரும் நியமிக்கப்பட்டிருப்பதாக ஜெயலலிதா தெரிவித்தார். இதற்கான உத்தரவை, தில்லியிருந்து வெளியிடுமாறு தாம் அத்வானியிடம் சொல்லியிருப்பதாகக் கூறினார்.

## கருணாநிதி கண்டனம்

ரேஷன் அரிசி விலையைக் கூட ஏற்றாமல் பிடிவாதமாக இருந்த தம்



''சாப்பிட வந்தவர்கிட்டே என்னய்யா சொன்னே? சாப்பிடாமலேயே எழுந்திரிச்சிப் போயிட்டாரு...''

''தப்பா ஒண்ணும் சொல்லலீங்களே... 'என்ன சார் சாப்பிடறீங்க? எங்க ஓட்டல்ல எல்லாமே உங்க வீட்டிலே செஞ்சமாதிரியே இருக்கும்' அப்படீன்னுதாங்க சொன்னேன்!''

– இரா. சம்பத் குமார்

ஆட்சியைக் கலைத்து, ஜெயலலிதாவின் நீண்ட நாள் ஆசையை நிறைவேற்றிய வாஜ்பாய் அரசைத் தாம் கடுமையாகக் கண்டிப்பதாகக் கலைஞர் கூறினார். இந்த ஜனநாயக விரோதப் போக்கைக் கண்டித்து, ஒவ்வொரு மாவட்டத்திலும் பொதுக் கூட்டம் போட்டு மக்களிடம் விளக்கப் போவதாக, நேற்று நடந்த திருமண விழா ஒன்றில் மணமக்களை வாழ்த்திப் பேசினார் கருணாநிதி.

## மூப்பனார் மௌனம்

கருணாநிதி அரசைக் கலைத்தது சரியா, தவறா என்று 2133 பஞ்சாயத்துத் தலைவர்களையும், 414 நகராட்சி உறுப்பினர்களையும் வருகிற ஒரு மாதத்தில் தாம் சுற்றுப் பயணம் செய்து சந்தித்துக் கருத்துக் கேட்கப் போவதாகவும், அவர்கள் கருத்தை அறிந்த பிறகே தாம் எதுவும் கூற முடியும் என்றும் அறிவித்தார் த.மா.கா. தலைவர் மூப்பனார். காமராஜர் ஆட்சி அமைக்கும் வாய்ப்புக் கிடைக்கும் போதுதான் தாம் இந்த ஆட்சிக் கலைப்புப் பற்றித் தீர்மானமாக எதுவும் கூற முடியும் என்று மேலும் தெரிவித்தார்.

## மற்ற தலைவர்கள்...

ம.தி.மு.க. தலைவர் வைகோ, பிரதமர் வாஜ்பாயின் இந்தத் துணிச்சலான செயலைப் பாராட்டினார். ஆனால் தி.மு.க. ஆட்சிக் கலைப்பைத் தாம் ஆதரிக்கவில்லை என்று திட்டவட்டமாகத் தெரிவித்தார். அரசியல் சட்டப் பிரிவு 356-ஐ பிரயோகிப்பதைத் தாம் ஆதரிக்கவில்லை என்றும், பிரிவு 456யோ, 556யோ பிரயோகித்திருக்கலாம் என்றும் கருத்துத் தெரிவித்தார்.

பா.ம.க. தலைவர் டாக்டர் ராமதாஸ், தி.மு.க. ஆட்சியைக் கலைத்தது சரியே என்றும், கருணாநிதிக்கு இது வேண்டியது தான் என்றும் திண்டிவனத்தில் தெரிவித்தார். இது ஜெயலலிதாவின் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி என்றும், தாம் எப்போதும் ஜெ.யின் கூட்டணியிலேயே நிரந்தரமாக நீடித்திருக்கப் போவதாகவும் அறிவித்திருக்கிறார்.

தமிழக ராஜீவ் காங்கிரஸ் தலைவர் வாழப்பாடி ராமமூர்த்தி, தி.மு.க. தலைவர் இனியாவது வாஜ்பாய், அத்வானி போன்ற தலைவர்களின் நியாய உணர்வைப் பற்றித் தாக்குதல் அறிக்கைகள் விடாமல் இருக்க வேண்டும் என்றும், ஜெ. விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தாம் என்றென்றைக்கும் அவரது நலம் விரும்பிதான் என்றும், விரைவில் போயஸ் கார்டன் சென்று அவரை நேரில் வாழ்த்தப் போவதாகவும் தம் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

இ. காங்கிரஸ் தலைவர் திண்டிவனம் ராமமூர்த்தி, தாம் இதுபற்றி உடனடியாகக் கருத்து எதுவும் சொல்ல முடியாது என்றார். தில்லி சென்று, சோனியா காந்தியின் கருத்தை அறிந்து கொண்டு வந்த பிறகே தமது கருத்தைக் கூற முடியும் என்றார். ஆனால் அதற்குள், குமரி அனந்தன் குடியரசுத் தலைவர் ஆட்சியைக் கண்டித்தும், இரா. அன்பரசு ஆதரித்தும் சென்னையில் அறிக்கைகள் வெளியிட்டிருப்பதைத் தாம் இன்னும் பார்க்கவில்லை என்றார்.

ஜனதா கட்சித் தலைவர் டாக்டர் சுப்பிரமணியம் சுவாமி, தாம் ஏற்கெனவே குடியரசுத் தலைவர் கே.ஆர். நாராயணனிடம் வைத்த கோரிக்கை இப்போது நிறைவேறிவிட்டதாகத் தெரிவித்தார். ஆனால் தமக்குக் கிடைக்க வேண்டிய தமிழக ஆளுநர் பதவி, சேடப்பட்டி முத்தையாவுக்குக் கொடுக்கப்பட்டதில் தமக்கு வருத்தம் இருப்பதாகத் தெரிவித்தார். ஆனால் இன்னும் ஒரே மாதத்தில் சேடப்பட்டி மாற்றப்பட்டு, தாம் ஆளுநராக வருவது நிச்சயம் என்றார். இதை ஜெயலலிதாவே தம்மிடம் தொலைபேசியில் தெரிவித்ததாகச் சொன்னார் சுவாமி.

கற்பனை: **சாருகேசி**

# தூத்துக்குடியைக் கலக்கிய கிரிக்கெட் மாட்ச்!

அனில் கும்ப்ளே ஒரே இன்னிங்ஸில் பத்து விக்கெட்கள் சுருட்டிக் கொண்டதைப் பற்றி இன்னமும் பேச்சு ஓய்ந்திராத நேரம் - அந்தச் சரித்திர

கல்கி ஆர். கிருஷ்ணமூர்த்தி அவர்கள்

• பெருமாள் ஆர்ட்ஸ் கைவண்ணத்தில்...

சம்பவம் நிகழ்ந்த எட்டாம் நாள் - தூத்துக்குடி மக்கள் மற்றொரு புகழ் வாய்ந்த கிரிக்கெட் மாட்சை எண்ணி எண்ணிப் பரவசமானார்கள்! இத்தனைக்கும் ஐம்பது வருடங்களுக்கு முன்பு நடந்த பந்தயம் அது. அமரர் கல்கி பாணியில் நேயர்களை அந்த தினத்துக்கே அழைத்துப் போவோம்!

மகன் ராஜேந்திரனின் கிரிக்கெட் ஆர்வம் கல்கி கிருஷ்ணமூர்த்திக்கு பெரு வியப்பூட்டியது. சோம்பேறிகளின் ஆட்டம் என்று பெர்னார்ட் ஷா கூறியதில் அவருக்கு முழுக்க முழுக்க உடன்பாடு. மகனோ, அன்று காலை பார்த்த கிரிக்கெட் பந்தயத்தைப் பற்றி உற்சாகம் கொப்பளிக்க வர்ணித்துக் கொண்டிருந்தான்.

"அப்படி என்னதான் இருக்கு அந்த ஆட்டத்திலே...?"

"ஒருநாள் என்னோடு வந்துதான் பாருங்களேன் அப்பா."

மறுநாளே மகனுடன் ஆஸ்திரேலியா Vs இந்தியா பந்தயம் பார்க்கப் போனார் கல்கி! அவர் அபிப்பிராயம் மாறவில்லை! "நீ இருந்து பார்த்துவிட்டு வா, நான் கிளம்பறேன்..." என்று சற்றைக்கெல்லாம் வேலைகளைக் கவனிக்கப் புறப்பட்டு விட்டார்!

அன்று மாலையே ஒரு பொதுக் கூட்டம். அதில் பேசிய கல்கி சொன்னார்: "இன்று காலை கிரிக்கெட் மாட்சுக்குப் போயிருந்தேன். அங்கே ஓர் அன்பர் என்னை அடையாளம் தெரிந்து கொண்டு சந்திக்க வந்தார். ஆர்வ மிகுதியால் நூறு ரூபாய் அன்பளிப்புத் தந்தார். நானும் அவர் அன்பாகக் கொடுத்ததை மறுக்க மனமின்றி வாங்கிக் கொண்டேன். இதோ அந்த நூறு ரூபாய்..."

பாக்கெட்டிலிருந்து ரூபாயை எடுத்துக் காட்டியவர் சொன்னார், "இந்தப் பணத்தை அப்படியே வ.உ.சி. ஞாபகார்த்த நிதிக்கு அனுப்பி விடப் போகிறேன்..."

அவ்வளவுதான்! உடனே வ.உ.சி. நினைவு நிதிக்குப் போட்டி

• விழா மேடை




போட்டுக் கொண்டு நன்கொடை வழங்க ஆரம்பித்து விட்டனர் கூட்டத்தினர். அப்போதே ரூ. 2000க்கும் மேல் வசூலாகி விட்டது! அந்த நிதி தமிழகமெங்குமிருந்து பலர் முயற்சியால் திரட்டப்

• பார்வையாளர்கள்

பட்ட
துடன் சேர்ந்து தூத்துக்குடி வ.உ.சி. கல்லூரியை ஸ்தாபிக்க உதவியது.

கல்கி பத்திரிகை மூலமும் விளம்பரம் செய்து 6457 ரூபாய் இரண்டு அணா, ஆறு பைசா வசூல் செய்து வ.உ.சி. நினைவு நிதிக்கு அனுப்பினார் கல்கி கிருஷ்ணமூர்த்தி.

இன்று அக் கல்லூரி ஏ.பி.சி. வீரபாகு அறக்கட்டளையினரால் நிர்வகிக்கப்படுவதுடன் அவ்வறக்கட்டளை நடத்தும் பல சகோதர/சகோதரி கல்வி நிறுவனங்களும் தூத்துக்குடிக்குப் பெருமை சேர்த்து வருகின்றன.

**வீ**ரபாகுவின் புதல்வர்களும் தூத்துக்குடி பிரமுகர்களுமான ஏபிசிவி சொக்கலிங்கம், ஷண்முகம் ஆகியோர் தூத்துக்குடியில் கல்கி நூற்றாண்டு விழாக் குழுவொன்றை நிறுவி, அமரர் கல்கிக்கு 12.2.99 அன்று விமரிசையாக விழா நடத்திச் சிறப்பித்தார்கள்.

காலையில் தூத்துக்குடி மஹாலக்ஷ்மி கல்லூரி மாணவிகள் தங்கள் முத்தமிழ் விழாவை கல்கி நூற்றாண்டு விழாவாகக் கொண்டாட, கவிசிவம், கி.ரா., ஆனந்தி ஆகியோர் சிறப்புரை ஆற்றி இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவியரின் மனத்தைக் கவர்ந்து, கைவலிக்க 'ஆட்டோகிராஃப்' போட்டுத் தந்தார்கள்!

அன்று மாலை, நகராட்சி திருமண மண்டபத்தில் நடந்த விழாவில்தான் கல்கி கிரிக்கெட் மாட்ச் பார்த்த சம்பவத்தை விவரித்தார் கி. ராஜேந்திரன். "கிரிக்கெட் மாட்சில் ஒரு ரசிகர் நூறு ரூபாய் தந்ததாக கல்கி அவர்கள் குறிப்பிட்டது வெறும் கற்பனை; அது கல்கி அவர்களுடைய சொந்தப் பணம்!" என்று கி.ரா., கல்கியின் சிறுகதை பாணியிலேயே எதிர்பாரா திருப்பத்துடன் முடித்தபோது அரங்கமே அதிர்ந்து விட்டது!

விழாவில் வரவேற்புரை நிகழ்த்தியவர் விழாக் குழு செயலர் எஸ். அருணாசலம். 'வெள்ளைத் தாள்களைக் கறுப்பாக்குவது போதாதா? வெள்ளை உள்ளங்களையுமா கறுப்பாக்குவது!' என்று சமீபத்தில் புதுக் கவிதை ஒன்று ஆதங்கத்துடன் எழுதப்பட்டது போலின்றி 'உள்ளங்களில் ஒளியூட்ட எழுதிய கல்கிக்கு விழா இது' என்று பெருமிதத்துடன் அனைவரையும் வரவேற்றார்.

**பு**து முயற்சியாக விழா நோக்க உரை என்பதாக ஒன்று இக்கூட்டத்தில் இடம்பெற்றது. அதனை

• கவி சிவம் சிறப்புரை





வழங்கிய ஆலிவர் பர்னாந்து விழாக் குழுவின் பொருளாளர். உரையும் பொருள் பொதிந்த உரைதான்!

"முத்துநகரத்து மக்கள், மனிதர்களிலே முத்தாகத் திகழ்கின்ற ஒருவருக்கு எடுக்கும் விழா இது; பத்திரிகைக்கு தர்மம் உண்டு என்பதை உணர்த்திய மாமனிதருக்கு நன்றி அறிவிப்பு விழா; அரசியல் அவலங்களை அன்றே தோலுரித்துக் காட்டியவருக்கு எடுக்கும் வீர விழா; பாரதி, காந்தி மண்டபங்கள் நிறுவ முன்னின்று தமிழகத்துக்குப் பெருமை சேர்த்தவருக்கு நடத்தும் விழா; ஏ.பி.சி. வீரபாகு கல்வி நிறுவனங்களுக்கு கல்கி இதழ் மூலம் 6457 ரூபாய் – (அதாவது – 1947-ல்! இப்போதைய மதிப்பு என்ன என்று நீங்களே கணக்குப் போடுங்கள்) நிதி திரட்டியவருக்கு எடுக்கும் விழா... பண்டைய இலக்கியம் வாசிக்கத் தந்தவர்; தற்கால இலக்கியம் தழைக்கச் செய்தவர்; நாட்டுப்பற்றை விதைத்தவர்; பாரதியின் அகால மறைவுக்குப் பின்னரும் அவர் சிந்தனைகளை எதிரொலித்துப் பரவச் செய்தவர், பண்பாட்டு நெறிகள் வகுத்துத் தந்து வாழ்ந்து காட்டியவர், கலை மறுமலர்ச்சிக்குப் பாடுபட்டவர் – இதையெல்லாம் செய்து மக்களை உயர்த்தி, ஓர் எழுத்தாளர் – ஓர் இதழியலாளர் மக்கள் மனங்களில் ஒரு சினிமா நட்சத்திரம் போல் இடம்பிடிக்க முடியும் என்று நிரூபித்தவர்..." என்று ஆலிவர் பர்னாந்து அடுக்கித் தீர்த்ததைக் கேட்க நமக்கே மூச்சுத் திணறி விட்டது.

தலைமையுரையை ரத்தினச் சுருக்கமாக முடித்துக் கொண்டார் ஏ.பி.சி.வி. சொக்கலிங்கம். ஏ.பி.சி.வி. கல்வி நிறுவனங்களுக்கும் கல்கிக்கும் உள்ள தொடர்பை நினைவு கூர்ந்தார்.

பாரம்பரியத்தைப் பெரிதும் போற்றிய கல்கிக்கு, பாரம்பரியக் கொள்கையிலிருந்து விலகாமல், லாப நோக்கின்றிக் கல்வி வழங்கி வரும் ஏ.பி.சி.வி. குடும்பத்தினர் முன்நின்று விழா நடத்தும் பொருத்தத்தை அன்று அனைவருமே குறிப்பிட்டு மகிழ்ந்தார்கள்.

சற்று இடைவெளி விட்டு உரைகளைத் தொடரத் தீர்மானித்து, அமரர் கல்கியின் உருவப் படத்தைத் திறந்து வைக்கும் பணியை அறவாணனிடம் ஒப்படைத்தார்கள். அறவாணன் அண்டையூரிலிருந்து வந்த துணைவேந்தர் – நெல்லை, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தவர். ரிமோட் கன்ட்ரோல் விசையை அவர் அழுத்த, பெருமாள் ஆர்ட்ஸ் வரைந்திருந்த அமரர் கல்கியின் தத்ரூபமான வண்ண ஓவியத்தின் திரை விலகியது.

• பரிசு பெறும் மாணவர்கள்....

இதைத் தொடர்ந்து, உள்ளூர் விழாக் குழுவினர் சேகரித்த தொகையிலிருந்து, ஐயாயிரம் ரூபாய் அமரர் கல்கி நினைவாக வைப்பு நிதியாகப் போடப்பட்டு, நற்பணிகளுக்குப் பயன்படுத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டது. சிறுவன் பார்த்திபனின் மருத்துவ சிகிச்சைக்கு இரண்டாயிரம் ரூபாய், காமராஜ் என்கிற கல்லூரி மாணவனுக்குக் கல்வி உதவித் தொகையாக ரூ 1250 என வழங்கி மேலும் பல நற்பணிகளுக்குப் பிள்ளையார் சுழியும் போடப்பட்டது அந்த மேடையில்!

இந்தச் சிறிய இடைவேளைக்குப் பிறகு மீண்டும் சொற்பொழிவுகள் – அறவாணன் மேற்கத்திய பாணியில் தொப்பி அணிந்திருந்தாலும் உள்ளத்தால், உணர்வால், இந்தியர், தேசபக்தர் என்று உணர்த்தி விட்டார் தமது உரையில்.

"தமிழர்கள் என்றாலே புறங்கூறுவோர், அதிகம் பேசுவோர், சிரிக்காத உம்மணாமூஞ்சிகள்' என்பது பரவலான அபிப்பிராயம் – சிங்கப்பூர் வரை எட்டியுள்ள சிந்தனை இது! ஆனால் 'சிரிக்காதவர்கள்' என்று முத்திரை பெற்றோரையும் சிரிக்கவைத்தார் கல்கி. எதை எழுதினாலும் சிரிக்க வைத்தார். எழுதுவதென்பது எத்தனை கடினம் என்று தினந்தோறும் அனுபவிக்கிறேன். ஆனால் கல்கி ஆயிரமாயிரம் பக்கங்களை எப்படி எழுதினார்? அதுவும் வசதிகள் வாய்ப்புகள் குறைவான காலத்தில் எப்படி எழுதினார்...?" என்று வியந்தவர், "கல்கி ஒவ்வொரு வார்த்தையையும் அனுபவித்து எழுதியிருக்க வேண்டும் – அதனால்தான் அவர் எழுத்து வென்றது. சிவகாமியின் சபதம் நாவலை முடிக்கிற தறுவாயில் 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற பாடல் வரிகளை எழுதுகிற போது அவர் கண்களில் நிச்சயமாக நீர் பெருகியிருக்க வேண்டும்..." என்று பேசிய போது தாமே உணர்ச்சிவசப்பட்டுப் போனார்.

மாணவர்களை நாள்தோறும் கையாள வேண்டிய செயல்வீரர் இப்படி இளகிப் போகிறாரே என்று நாம் வியக்க, மீண்டும்

வீரத்தை வரவழைத்துக் கொண்டு தமது உரைக்கு மகுடமான வரிகளைக் கூறி முடித்தார் அறவாணன் :

"தமிழில் முதலாவதாக எதிர்க்கேள்வி கேட்டுச் சிந்திக்க வைத்தவர் தந்தை பெரியார்; முதன் முதலாக வாசிக்க வைத்தவர் கல்கி!"

வாழ்த்துரை வழங்கிய சுப்பிரமணிய ஆதித்தன் கல்கியின் பாத்திரப் படைப்புகளை வியக்க, புலவர் பழனி கிருஷ்ணன் கல்கியின் கவிதை உள்ளத்தை ரசிக்க, மீண்டும் சொற்பொழிவுகளுக்கு இடைவேளை : கல்கி நூற்றாண்டு விழா பேச்சுப் போட்டியில் பரிசு பெற்ற மாணவர்களுக்கு இ. ராஜேந்திரன் பரிசுகளை வழங்கினார்.

இத்தனையும் முடிவதற்குள் இரவு மணி ஒன்பதை நெருங்கி விட்டது. ஆனாலும் ஒருவராவது எழுந்துபோக வேண்டுமே...! அத்தனை பேரும் நட்சத்திரப் பேச்சாளர் சுகி.சிவம் என்ன சொல்லப் போகிறார் என்று காதுகளைத் தீட்டிக் கொண்டு காத்திருந்தார்கள்.



மகன்: ஒரு வாரமா அப்பா பூஜையறையில் ஒரு 200 பக்க நோட்டை வச்சு அர்ச்சனை பண்ணிக்கிட்டிருக்காரே! என்ன நோட்டும்மா அது?

**தாயார்: அடுத்த வாரம் நடக்கப் போகிற உன் அண்ணன் கல்யாணத்துக்கு மொய் எழுதப் பயன்படுத்தப்போகிற நோட்டு!**

**— உ. ராஜாஜி**

தமது வீட்டில் தாத்தா பாட்டி படங்களுக்குப் பக்கத்தில் கல்கி, டி.கே.சி. படங்களும் மாட்டப்பட்டிருக்கும் என்று ஆரம்பித்து இளமைப் பருவத்தில் இந்தப் பெரியோர்களின் பாதிப்பு தன்னையறியாமலே ஆசியாக வந்து விழுந்ததைக் குறிப்பிட்டுச் சொன்னார் சுகி.சிவம். குற்றால அருவியாய்ப் பெருக்கெடுத்த அவர் உரையிலிருந்து சில திவலைகள் மட்டும் இதோ :

● தொங்க விடவே இடம் இன்றி கடைகளை நிரப்பியிருக்கின்றன பத்திரிகைகள். இன்று இத்தனை பத்திரிகைகளையும் வாங்கிப் படித்தாலும் கிடைக்க இயலாத சந்தோஷம் அன்றைக்குக் கல்கியை மட்டுமே படித்தபோது வந்திருக்கிறது.

● கல்கி கடைசி அவதாரம் என்பார்கள். ஆனால் அமரர் கல்கி பத்துக்கு மேற்பட்ட அவதாரங்கள் எடுத்தார். எத்தனை புனை பெயர்களில் எத்தனை எழுத்துகள். அவற்றுள் எத்தனையெத்தனை அமரத்துவம் வாய்ந்தவை!

● அவருக்குக் கதை சொல்லும் ஆற்றல் எங்கேயிருந்து வந்திருக்கும்...? சிறு வயதில் புத்தமங்கலம் கிராமத்தில் அண்ணாவுடன் சேர்ந்து சதங்கை கட்டிக் கொண்டு நர்த்தனமாடியபடியே ஹரிகதை, பஜனை நிகழ்ச்சிகள் வழங்கிய பின்புலம் கைகொடுத்தது. ராமாயண, பாரதக் கதைகளை அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். வியாஸரும் வால்மீகியும் கம்பரும் வள்ளுவரும்தான் பின்னாளில் அவருக்குள் இயங்கி எழுத வைத்திருக்க வேண்டும்.

● காங்கிரஸ் தொண்டராக இருந்தபோது சம்பளம் கூட்டித் தரும்படி ராஜாஜியிடம் கேட்டார் கல்கி. 'உனக்கு இன்னும் திருமணமாகவில்லை. அதனால் ஏற்கெனவே பேசிய சம்பளத்தில் ஐந்து ரூபாய் குறைத்துத் தருகிறேன்' என்று பதில் சொன்னார் ராஜாஜி. நியாயமாய் ஓர் இளைஞனுக்கு அச்சந்தர்ப்பத்தில் ராஜாஜியிடம் வெறுப்பு வந்திருக்க வேண்டும். ஆனால் கல்கிக்கு அப்படி ஏற்படவில்லை. இருபத்தைந்து ரூபாய்க்குள் வாழ தமக்குக் கற்றுத் தந்த ஞானி ராஜாஜி என்று கொண்டார் கல்கி. பொதுப் பணத்தில் அவர் ரூ. 5/- மிச்சம் பிடித்ததைப் போற்றினார்! ராஜாஜி அவருக்குத் தந்தை போல; டி.கே.சி. ஒரு தாயைப் போல.

அன்றைய விழாவில் பொன்னியின் புதல்வருக்கு ஒரு புதிய பட்டமும் வழங்கினார் சுகிசிவம்; எழுத்துச் சக்கரவர்த்தியாக வாழ்ந்த **'கலியுக வியாஸர்'** என்று!

நன்றியுரையை தெய்வமுருகன் வழங்கிய பிறகும் கூட்டம் கலைய மனமின்றித் தேங்கி நின்று சிறப்புப் பேச்சாளர்களை வட்டமிட்டது. தூத்துக்குடி நகராட்சி திருமண மண்டபத்தில் ஆயிரக்கணக்கான திருமணங்கள் நடந்திருக்கும். அந்த ஆயிரக்கணக்கான மண விழாக்களில் ஆயிரக்கணக்கான தம்பதியர் அடைந்ததைக் காட்டிலும் ஆயிரமாயிரம் மடங்கு ஆனந்தத்தை அன்று கல்கி ரசிகர்கள் அடைந்தார்கள் என்று சொன்னால் அதுவும் ஆயிரத்தில் ஒரு வார்த்தையாகவே இருக்கும்! ●

**— நமது நிருபர்**

## இலக்கியச் சேறு மணக்குமா?

தாக்கிக் கொண்டே இருந்தால்தான் தாக்கரே! லேடஸ்ட் இலக்கு, இலக்கியவாதிகள்! எழுத்துலகில் அரசியல் தலையீட்டைப் பற்றி, மராத்திய சாஹித்ய சம்மேளன விழாத் தலைவர் வசந்த் பாபட்டும், ஏனையோரும் கசமுசக்க, தாக்கரே தடாலடியாக, "விழாவிற்காக அரசிடம் கை நீட்டி 25 லட்சம் வாங்கும் போது மட்டும் நாங்கள் இனிக்கிறோமா?" என்று சாடியதுடன், சிவசேனைச் சங்கான 'சாம்னா'வில், எழுத்தாளர் கூட்டத்தை மாட்டுச் சந்தைக்கு ஒப்பிட்டு, நையாண்டி செய்து விட்டார். "மாடுகளால் விலையை நிர்ணயிக்க முடியுமா? வாங்குவோர் தானே அதை முடிவு செய்ய வேண்டும்?" என்று கேட்டு விட்டாரா, கொதித்துப் போய்விட்டார் பாபட்! "இவர் கைக் காசையா கொடுத்து விட்டார்? பொது மக்களின் வரிப் பணத்தில்தானே கை வைத்திருக்கிறார்? இவர் சொந்தப் பணத்திலிருந்து, 25 கோடிகள் கொட்டிக் கொடுத்தாலும், எங்களை விலைக்கு வாங்க முடியாது! அரசுப் பணத்தில் காறி உமிழ்கிறேன்" என்று தூற்றி விட்டார். இந்த உமிழ்தலில் பலரும் சேர்ந்து கொள்ள, கோபமுற்ற மேயர் நந்து சதம், BMC தரப்பிலிருந்து வழங்கப்பட்ட 10 லட்சத்துக்கு, தடை விதித்து விட்டார். உடனே அரசுப் பணியிலிருந்த ஏழு எழுத்தாளர்கள் ராஜினாமா செய்து விட்டனர். பாக்ஸிங் தொடர்கையில்... ஒரு விஷயம்.. நடந்து முடிந்த 72வது மராத்திய சம்மேளனத்திற்கு, இந்த 25 லட்சம் தவிர, முதல்வர் நிவாரண நிதியிலிருந்து 10 லட்சம், சித்தி விநாயகர் அறக்கட்டளையிலிருந்து சில பல லட்சங்கள்... கொடுக்கப்பட்டுள்ளன! எதுவோ உதைக்கவில்லை? (ஐயையோ... நாலுகால் பிராணிகளுடன் சம்பந்தப்படுத்த வேண்டாம்)

## மந்திரமில்லை... தந்திரமில்லை

பட்ஜெட் போடுவது எப்படி என்று எங்கள் மேயர் நந்து சதாமிடமிருந்துதான் கற்றுக் கொள்ள வேண்டும். வரி என்று ஒரு பைசா அதிகரிக்காமல், பழைய 614.97 கோடி பற்றாக்குறையை சூ மந்தர் ஆக்கிவிட்டார்! நடப்பு ஆண்டுக்கு 4 லட்சம் வருவாயாக வேறு காட்டியிருக்கிறார்! ஏதாவது மந்திரம் தந்திரமா என்று வியக்காதவரில்லை; வரி வசூலிப்பை, முக்கியமாக நுழைவு வரி (ஆக்ட்ராய்) ஏய்ப்பை கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுப் பார்க்கப் போகிறாராம்! ரோடுகளுக்கு கான்க்ரீட் போடுதல், கழிவு நீர் கால்வாய்களைச் சுத்தபடுத்த ப்ரைவேட் காண்ட்ராக்டர்களை நியமித்தல் போன்றவை நிறுத்தப்படுமாம்; ரோடு ரிப்பேருக்கு ஏதோ 'ப்ளாக் – டாப்' திட்டம் வைத்திருக்கிறாராம். சுத்தப் படுத்தலையும் BMC ஊழியர்களே செய்யப் போகிறார்களாம்; ஆரம்பக் கல்வி, குடிசை மாற்று வாரியம் போன்றவற்றுக்கான உதவித் தொகைகளைக் குறைத்து, குடும்ப நலத் திட்டங்களில் அக்கறை செலுத்தப் போகிறார்களாம்.. என்ன செய்து என்ன? ஊழியர்களின் ஊதியமே, பட்ஜெட்டில் 70% ஐ விழுங்கி ஏப்பம் விட்டு விடுமே!

## "நாய்"கள் – "நாய்"கி!

தீபாவளி, கிறிஸ்துமஸ் தோற்றது; இந்த 'வேலண்டைன் டே' கொண்டாட்டங்கள் அப்படி ஒரு போடு போடுகின்றன! அன்புக்கும் விலை பேச ஆரம்பித்து விட்டார்களே! பணக்கார அன்பைப் பறைசாற்ற தங்கத்தில் வைரம் பதித்த இதய லாக்கெட்டுகள், பொன்னெழுத்துக்களில் கவிதை சொல்லும் ஆயிரம்

## வரியில்லாமல்

ரூபாய் கிரீட்டிங் கார்டுகள்... ஏழைக்கேற்ற எள்ளுருண்டை ரகங்களாய் வெல்வெட் இதயங்கள், இதயப்பட்டியிட்ட 'டெட்டி பேர்'கள், சாதா வாழ்த்தட்டைகள்... ப்ர்ஃபூம், பொக்கே, பர்ஸ், பலூன், கீசெயின், கேக் என்று எங்கே பார்த்தாலும் இதயங்கள். செய்தித் தாள்களில் இதயங்களிந்த டின்னர் பார்ட்டிகள், ஜோடிப் பொருத்தப் போட்டிகள், டீ.வியைத் திருகினால் கன்னத்தில் சிவப்பு இதயத்தை ஏற்றிய காதல் பறவைகள்.. அலுத்துப் போகும் தருவாயில், ஜீ டீவியில் ஒரு நாய் ஜோடியைக் காண்பித்தார்கள். கண்ணோடு கண்ணினை நோக்கி, இரண்டும் 'வள்'ளிக் கொண்ட அழகிருக்கிறதே – அள்ளிக் கொண்டே போய்விட்டது இதயங்களை!

## "வாட்ச்" பண்ண வேண்டாமா?

ஃபிலிம் ஸ்டார் வீட்டில் ஒன்றரை



• அடிக்கல் நாட்டு விழா

# மும்பை பட்ஜெட்!

வருடங்களாக வேலை செய்தும் கூட, தங்கமும் வைரமுமாக மின்னும் ஃப்ரெட், மாண்ட் ப்ளான்க், சோபார்ட் போன்ற வாட்சுகளின் விலை விவரங்களைத் தெரிந்து வைத்துக் கொள்ளாத கிரிஷ் ஸோலன்கியை என்னென்பது? ஒரு மாத காலமாக திட்ட மிட்டுப் படிப்படியாக ஒவ்வொன்றாகக் கடத்தியும், அதை நண்பர்களிடம் கொடுத்து விலை விசாரிக்கச் சொன்னபோது, ஃபெரட்டின் விலை 65,000 என்ற உடன் வாயைப் பிளந்தால் மாட்டிக் கொள்ளாமலிருக்க முடியுமா? வாட்சுகள் எப்படிக் கிடைத்தன என்பதற்குப் பதில் சொல்லத் தெரியாமல் நண்பர்கள் ஸோலன்கியை மாட்டி வைக்க, போலீசில் திருட்டை ஒப்புக் கொள்ள வேண்டியிருந்ததே! நடிகர், தமக்குக் கிடைத்த இந்த விலையுயர்ந்த பரிசுகளை, ஆபீஸ் ட்ராயரில், பூட்டாமலே போட்டு வைத்திருப்பாராம்! எப்போதாவது கட்டிக் கொள்வாராம்; தொலைந்த விவரம் கூட அவருக்குத் தெரியாதாம்! ட்ராயர் ஃபுல்லாக 'வாட்ச்'சிருந்தும், 'வாட்ச் ஃபுல்லாக' இருக்கத் தெரியாத அந்த நடிகர் – அமிதாப் பச்சன்!

## தாமதிக்காத நீதி

முற்றிலும் தாய்க்குலத்தால் நடத்தப்படும் "ஸ்ரீ காமாக்ஷி ட்ரஸ்ட்", தனது முதியோர் இல்ல ப்ராஜக்டான "ப்ரேம் குடிர்"க்கு அண்மையில் அடிக்கல் நாட்டு விழா நடத்தியபோது, பூஜை செய்து வைக்க வேண்டிய வேதியர்கள், வருவதற்கு ஏக தாமதமாக்கி, பெண்களை டென்ஷனாக்கி விட்டனர். விழாவுக்குத் தலைமை, (ஸ்ரீ கிருஷ்ணா கமிஷன் புகழ்) ஜஸ்டிஸ் ஸ்ரீ கிருஷ்ணா! சிறப்பு விருந்தினர் வக்கீல் வெங்கடேஸ்வரன். 'வக்கீலிடம் எங்கள் கேஸைச் சொல்லி, நீதிபதியிடம் 'தட்சிணைக் குறைப்பு' தீர்ப்பை வாங்கியுள்ளோம். தகராறு செய்தால் இருக்கவே இருக்கிறார்கள் போலீஸ்' (நீதிபதிக்குக் காவலாக சிறுபடையே வந்திருந்தது) என்று மகளிர் (விளையாட்டாக) மிரட்டியதற்கெல்லாம் அவர்கள் ஒன்றும் மிரளவில்லை. ஆனால்... நவக்ரஹ சாந்தி, வாஸ்து பூஜை முடிந்து, 27 நட்சத்திரங்களுக்கும் ஒவ்வொன்றாக மந்திரம் சொல்லி, பிரார்த்தனை செய்து, ஆசீர்வதிக்கும் போது, நீதிபதியும் வக்கீலும் மாறி மாறி சாஸ்தர சுத்தமாக, அதிஸ்பஷ்டமாக மந்திரங்களைச் சொன்னபோது... ஆடித்தான் போய் விட்டார்கள். இன்னும் கொஞ்சம் லேட்டாக்கி இருந்தால்... அவர்களே பூஜையை நடத்தி, தட்சிணையும் வாங்கிக் கொண்டிருக்க மாட்டார்களோ?

— ஜெயஸ்ரீ ராஜ்



**மை**தானத்தில் விளையாடிக் கொண்டிருந்த சில சிறுவர்களைத் தவிர அந்தப் பள்ளி கிட்டத்தட்ட காலியாகி விட்டிருந்தது. வகுப்புகளெல்லாம் முடிந்து அரைமணி நேரமாகி விட்டாலும் ஆசிரியர்கள் அறை மட்டும் நிரம்பி இருந்தது. "ஸ்கூல் முடிஞ்சு ஓர் அரை மணி நேரம் கழிச்சுத்தான் டீச்சர்ஸ் கிளம்பணும்'' என்பது தலைமையாசிரியரின் உத்தரவு.

கையில் சிலம்புக்கு பதிலாக ஹர்ஷாவின் மார்க்-ஷீட். மற்றபடி 'தேராமன்னா' என்று குமுறிய கண்ணகியின் கோபத்துக்குச் சற்றும் குறையாத ஆவேசத்துடன் ஆசிரியர்கள் அறைக்குள் நுழைந்தாள் மந்தாகினி.

"வாங்க" என்று ஹர்ஷாவின் வகுப்பு ஆசிரியை வரவேற்றார். வகுப்பில் எப்போதும் முதல் ராங்க் வாங்கும் மாணவனின் தாய் என்பதால் மந்தாகினியின் மீது அவருக்கு ஒரு தனி மதிப்பு உண்டு.

மந்தாகினி ஒரு மரியாதைக்குக்குக் கூட புன்னகைக்கத் தயாராயில்லை. ஹர்ஷாவின் தேர்வுத்தாளைப் பிரித்து அதில் ஒரு பகுதியை ஆசிரியைக்கு சுட்டிக் காட்டினாள்.

'பஸ்ஸுக்கு —— சக்கரங்கள்" என்ற கேள்விக்கு, கோடிட்ட இடத்தில் "நான்கு" என்று பதில் எழுதியிருந்தான் ஹர்ஷா. அதற்கெதிரே சிவப்பு மையால் பெருக்கல் குறி. அந்த மொத்த விடைத்தாளிலும் காணப்பட்ட ஒரே சிவப்புப் பெருக்கல் குறி!

"இதிலே என்ன தப்பு?'' என்றாள் மந்தாகினி மூக்கு விடைக்க.

''அங்கே விடை 'ஆறு'ன்னு இருந்திருக்கணும். ஹர்ஷா 'நான்கு'ன்னு தப்பா எழுதிட்டான். பரவாயில்லை விடுங்க. மத்தபடி உங்க

# அருணன் சரண்யா

# சக்கரங்கள்

பையன் படுபுத்திசாலி. இது சின்ன மிஸ்டேக்தான். ஒரே ஒரு மார்க்தான் குறைஞ்சிருக்கு."

"குறைஞ்சது ஒரு மார்க்கா இருக்கலாம். ஆனால் இதனாலே முதல் ராங்க் போயிடுச்சே டீச்சர்."

"வருத்தப்படாதீங்க. அடுத்த முறை வாங்கிடுவான்."

"நோ. செய்யாத தவறுக்காக அவன் எதுக்கு மதிப்பெண்ணையும், ராங்க்கையும் இழக்கணும்? இதுதான் என் கேள்வி."

"அந்தக் கேள்விக்கு சரியான விடை 'ஆறு'தாம்மா. பஸ்ஸுக்கு முன்னால் இரண்டு சக்கரங்கள். பின்னாலே நாலு. நீங்க கவனிச்சதில்லையோ என்னமோ!"

"அது வேறே விஷயம். ஸ்கூட்டரிலே ஸ்டெப்னி இருந்தாலும் அதை டூ-வீலர்னு தானே சொல்றோம். அதே போல பஸ்ஸை ஃபோர்-வீலர்னுதானே சொல்வது வழக்கம். அதனாலே இந்த விடைக்கும் நீங்க ஒரு மார்க் கொடுத்துத்தான் ஆகணும்."

"ஸ்டெப்னி என்பது வண்டி ஓடும்போது ஓடுவதில்லையே. ஆனால் பஸ் ஓடும்போது ஆறு சக்கரங்களும் சுத்துதே."

மந்தாகினி விடுவதாயில்லை. டெக்னிகலாக ஒரு வாதத்தை முன்வைத்தாள். "பின் பக்கத்திலே ஒரு பக்கத்திலே ஒரே அச்சாணியில் சுற்றுவதை இரண்டு டயர்கள்னு சொல்லலாமே தவிர அதை இரண்டு சக்கரங்கள்னு எப்படிக் கணக்கெடுத்துக்க முடியும்?"

ஆசிரியைக்கும்

இந்த விவாதத்தில் சுவாரசியம் வந்திருக்க வேண்டும். சிரித்தபடியே "அதெப்படி? டயர் மட்டும் இல்லையே! அதுக்குள்ளே ட்யூப், நட், போல்ட் இப்படி எல்லாம்தானே இருக்கு. அதனாலே அதைச் சக்கரம்னுதான் கணக்கெடுத்துக்க முடியும்."

மந்தாகினி வாயடைத்துப் போனாள் - தாற்காலிகமாக. பிறகு சுதாரித்துக் கொண்டு "பஸ்ஸில் 'மொத்தம்' ஆறு சக்கரங்கள் இருக்கலாம். ஆனால் பஸ்ஸிலே 'நாலு சக்கரங்கள் இருக்கு'ன்றதை உங்களாலே மறுக்க முடியாது இல்லையா? அதிகப்படியாக ரெண்டு சக்கரங்கள் இருப்பது வேறு விஷயம். நீங்கள்



**"தலைவர் விரும்பினபடியே வழக்குகளை வேற நீதி மன்றங்களுக்கு மாற்றியாச்சு. இன்னும் என்ன கவலை?"**

**"தாம் விரும்பற தீர்ப்பையும் எழுதி வச்சருக்காராம்! அதை ஏற்றுக்கிட்டு மத்திய அரசு உத்தரவு பிறப்பிக்கணுமாம்!"**

**- அம்பை தேவா**

கேள்வியிலே 'மொத்தம்' எவ்வளவு சக்கரங்கள்னு கேட்கலியே."

"ஏம்மா அதுக்காக மனிதனுக்கு ஒரு காதுன்னு விடையளிச்சால் ஒத்துக்க முடியுமா? அதே மாதிரி மனிதனுக்கு ஒரு கையில் ஆறுவிரல்கள்னு பதில் எழுதிட்டு, லட்சத்துலே ஒருத்தருக்கு ஆறுவிரல் இருக்குதேன்னு ஆர்க்யூ செய்யக் கூடாது."

மந்தாகினிக்குத் தன் மகனின் முதல் ரேங்க் பறிபோய்க் கொண்டிருக்கிறதே என்று அழுகையே வந்து விட்டது. அடக்கிக் கொண்டு வீம்பு செய்தாள். "இங்கே எப்படியோ, எங்க ஊரிலே நாலுசக்கர பஸ்களைப் பார்த்திருக்கேன்" என்றாள்.

திடீரென்று ஆசிரியைக்குச் சந்தேகம் வந்து விட்டது. நாலு சக்கர பஸ்களும் ஒரு வேளை உண்டோ? அதை மறைத்தவராக "இங்கெல்லாம் பஸ்ஸிலே கூட ஆறு சக்கரங்கள்தான்."

"அப்படியானா ஆறு அல்லது நாலு ஆகிய இரண்டையுமேதானே சரியான விடைன்னு நீங்க வச்சுக்கணும்."

இடவலமாகத் தலையாட்டிய ஆசிரியை இப்போது தமது பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்தினார். "எல்லா மாணவர்களுக்கும் பொது அறிவுப் புத்தகம் ஒண்ணு கொடுத்திருக்கோம். அதிலே இதற்கான விடை 'ஆறு'ன்னுதான் போட்டிருக்கு. அதிலே இருப்பதை எழுதினால்தான் மதிப்பெண் கொடுக்க முடியும்."

முகம் வெளிறிப்போய் நிற்கும் மந்தாகினியைப் பார்த்துக் கனிவுடன் தொடர்ந்தாள். "ஹர்ஷாவைவிட இந்த முறை அரை மதிப்பெண் அதிகம் வாங்கியதாலே பவித்ரான்ற பெண்ணுக்கு முதல் ராங்க் கிடைச்சிருக்கு. இப்போ சரியில்லாத பதிலுக்காக ஹர்ஷாவுக்கு ஒரு மார்க் கொடுத்து அந்தப் பவித்ராவின் சந்தோஷத்தை நான் பாழ்பண்ண விரும்பலே. சாரி. மத்தபடி இதுக்காக நீங்க இவ்வளவு டென்ஷன் படத் தேவையில்லை."

**வீ**ட்டுக்குள் நுழைந்தபோது -

"மம்மி, மிஸ் என்ன சொன்னாங்க?" என்று கேட்டபடி வந்த ஹர்ஷாவைப் பளாரென்று அறைந்தாள். "சனியனே. புத்தகத்தை ஒழுங்கா படிச்சுட்டுப் போயிருந்தா இந்தத் தடவையும் முதல் ராங்க் வாங்கியிருக்கலாமில்ல?"

பொறிகலங்கிப் போய் நின்றவனை பிரசாத் தன்புறமாக அழைத்துக் கொள்வதற்குள் அவன் அப்பாவிடமிருந்து குரல் எழுந்தது.

"முதல் ராங்க் வாங்கல்லேன்னா குடியா முழுகிடும்? குழந்தைகள் பூ மாதிரி. வாட வைக்கக் கூடாது" என்ற பிரசாதின் அப்பா பேரனைத் தம்முடன் அழைத்தபடி வாசலுக்கு நகர்ந்தார்.

அவரை ஒருகணம் எரித்துவிடுவது போல் பார்த்தாள் மந்தாகினி. பிரசாத் அவளிடம் கோபமாக எதையோ பேச முனைய, அவனது அம்மா அதைத் தடுக்கும்விதமாகக்

குறுக்கிட்டாள். "பிரசாத், இந்த விஷயத்தை இத்தோடு விடு. ஆபீசிலே உழைச்சிட்டு வந்த சோர்வு அவனுக்கு - கூடவே பிள்ளையின் படிப்பைப் பற்றிய கவலை. கொஞ்ச நேரத்திலே சரியாயிடுவா" என்றாள்.

மந்தாகினிக்கு இப்போது மாமியார் மேல் கோபம் கொள்ளையாக வந்தது. இப்படி ஏதாவது பேசி பிள்ளையிடம் நல்ல பெயர் வாங்கிக் கொள்ள வேண்டியது. தனக்கு மட்டும் கொடுமைக்காரி இமேஜ்.

"இப்ப நீங்க என்ன சொல்ல வரீங்க?" என்று கேட்க நினைப்பதற்குள், "கொஞ்சம் இரு. உனக்குக் காப்பி கலந்துண்டு வரேன்" என்றபடி சமையலறைக்குள் போனாள்.

"பாட்டி எனக்கு இன்னிக்கும் அந்த ராட்சஸன் கதை சொல்லணும் என்ன?" என்றபடி பாட்டியின் பின்னே சென்ற சௌம்யாவைக் கண்டபோது அவளது கோபம் அதிகமானது. 'பல மணி நேரத்துக்குப் பிறகு தன்னைப் பார்க்கும் இவள் தன்னிடம் ஓடி வந்து ஒட்டிக் கொள்ளாமல், பாட்டியிடம் கதை கேட்கப் போகிறாளே!'

இரவு படுக்கையறைக்குள் நுழைந்தபோது மந்தாகினியின் எரிச்சல்கள் அடங்கியிருந்தன. குழந்தைகள் இருவரும் தூங்கிவிட்டிருக்க, பிரசாதைக் கெஞ்சலாகப் பார்த்தாள். "நான் ஹர்ஷாவை அடிச்சிருக்கக் கூடாதுங்க" என்றாள் ஏதோ பாவமன்னிப்பு போல.

பிரசாத் மௌனமாகவே இருக்க, சங்கடத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள். பிறகு "உங்களுக்குத் தெரியாது. நான் இந்தக் குடும்பத்தை எவ்வளவு நேசிக்கிறேன். நீங்க, நான், ஹர்ஷா, சௌம்யா நம்ம நாலு பேரும் சேர்ந்த இந்த அழகான குடும்பத்தை எனக்குக் கொடுத்த கடவுளுக்கு நான் தினமும் நன்றி சொல்றேன் தெரியுமா? இருந்தாலும் ஹர்ஷாவோட மிஸ்கிட்ட போட்ட சண்டையாலே இன்னைக்கு டென்ஸாயிட்டேன். அவங்க ஒரேயடியா சாதிக்கிறாங்க."

"பஸ்ஸுக்கு நாலு சக்கரம் போதாது மந்தாகினி. ஆறு வேணும். நாலு சக்கரங்களிலே கூட பஸ் ஓடலாம். ஆனால் அதிர்வுகள் இல்லாமல் அழகாகப் பயணம் செய்யவும், அதிகப்படி லோடு சேரும்போது அதைத் தாங்கிச் செல்லவும் ரெண்டு எக்ஸ்ட்ரா சக்கரங்கள் அவசியம் தேவை" என்றான் பிரசாத்.

மந்தாகினிக்குப் புரிந்தது. ●



## கழுகு போலக் காத்திருப்பார்...

டைனாஸ் என்று பல பேர்கள்
பரவி எங்கும் மறைந்திட்டார்
ஐயோ வென்று முதலீட்டார்
அங்கு மிங்கும் அலைகின்றார்
பைய உருவை மாற்றிடுவார்
பலதொழில் அதிபர் ஆகின்றார்
கையில் கிடைத்த பொருளெல்லாம்
கறையான் தின்ற இரும் பென்றார்!

ஊதியம் பெற்ற ஊழியர்கள்
உழைக்கும் மக்கள் பணத்தினையே
தேதி யிட்டு மோசடியாய்த்
திகைக்க விட்டு எடுக்கின்றார்
நாதியற்ற பணம் போல
நாளும் மோசடி செய்கின்றார்
வீதியில் மக்கள் நிற்கின்றார்
வேதனை சொல்லக் கணக்கிலையே!

திருடர் கூட்டம் பலவிதமாய்த்
தேசந்தோறும் இருக்கின்றார்
வருடந்தோறும் பல கோடியாய்
வறுமைக் கோட்டை அழித்திடவே
பெருமை யோடு திட்டங்கள்
போட்டால் என்ன பயனுண்டு
கழுகு போலக் காத்திருப்பார்
காணா தெங்கும் மறைந்திடுவார்

— தா. தி. வேலன்

தெரியலே..'' என்றான் சிவராம்.

"எதுக்கு... அந்த லெட்டர்..."

"அப்போதுதானே உன்னுடைய உண்மையான அப்பா யாரென்று தெரியும். உன்னை அவரோடு சேர்த்து வைக்க வேண்டாமா... உனக்கும் அந்த ஆசை இருக்காதா...''

''இல்லை.. வேண்டாம்...''

தனம் ஆவேசமாய்த் தலையசைத்தாள்.

"சரி.. உண்மை என்னவென்று தெரிந்து கொள்ளவாவது...''

''மாமா என்னிடம்தான் லெட்டரைக் கொடுத்தார். உங்களிடம் தரச் சொல்லி...''

"என்ன..."

சிவராம் அதிர்ந்து போய் அவளைப் பார்த்தான். ஸ்வேதாவும் வெறித்தாள்.

"மன்னிச்சுருங்க. லெட்டரைப் பிரிச்சுப் படிச்சேன். கவரை லைப்ரரில விட்டுட்டு இங்கே வந்தேன். லெட்டரைக் கிழிச்சுட றதா இல்லே.. பத்திரமா வச்சுக்கிறதான்னு புரியலே. அப்ப யாரோ வர மாதிரித் தெரியவும்... அந்த அங்கிள் இருக்காரே... கல்கண்டு கொடுத்தாரே... அவரு வீட்டு ஜன்னல் வழியா உள்ளே போட்டுட்டேன். அவர் மாடிக்குப் போகும் போது போய் எடுத்திர லாம்னு நினைச்சேன். கதவைப் பூட்டிக் கிட்டு போனதாலே எடுக்க முடியலே...''

சிவராம் ஆச்சர்யமும் திகைப்புமாய் அவளைப் பார்த்தான்.

''உன் அப்பா யாரென்று உனக்குத் தெரியுமா... வேலு மாமா என்னதான் எழுதியிருந்தார் சொல்லேன்''

தனம் பேசாமல் நின்றாள்.

கண்ணீர் முட்டிக் கொண்டு பெருகியது.

"தனம்... இந்தக் கேள்விக்காவது பதில் சொல். என் அப்பா இதில் சம்பந்தப்பட்டிருக்கிறாரா...''

''இல்லை...''

தனம் மறுப்பாய்த் தலையசைத்தாள்.

''அப்படியென்றால்...''

சிவராமின் மனத்தில் விபரீதமாய் ஒரு கற்பனை உருவானது.

புரபசர்!

சரி. அவராகத்தான் இருக்க வேண்டும். இத்தனை குழப்பங்களுக்கும் அவர்தான் காரணம்.

ஆனால்... வேலு... அவன் என்னதான் எழுதியிருந்தான். தனம் ஏன் பேச மறுக்கிறாள்...

''மாமன் சத்தியம் பண்ணச் சொல்லிச்சு. தனம்.. உனக்கு நல்லதுதான் செஞ்சிருக்கேன். நீ எதுவுமே பேசாதேன்னு சொன்னாரு... நீங்க இவ்ளோ அன்பா இருக்கச்சே, என்னால...''

வெடுக்வெடுக்கென்று வார்த்தைகள் இப்போதும் விழுந்தன. குதூகலிக்கத்தான் மனதில்லை.

''ஸார்... சிவராம் ஸார்...''

யாரோ ஓடி வந்தார்கள்.

"ஏ... என்ன..."

"விபத்து... நம்ம புரபசர்... அடிபட்டு... ஹாஸ்பிடல்ல இருக்கார். உங்களைப் பார்க்கணுமாம்."

(தொடரும்)

(18-ம் பக்கத் தொடர்ச்சி)

அ. சினிவாச ராகவனைப் போய்ப் பாருங்கள். அவர் ஏதாவது உதவக்கூடும்" என்றார்.

கடைசி முயற்சியாக மயிலை சமஸ்கிருதக் கல்லூரி அருகே இருந்த பேராசிரியர் அ.சீ. ராவின் வீட்டுக்குப் போனோம்.

என் சகோதரர் ஒரு பேராசிரியராக இருந்ததால் – அதுவும் சமஸ்கிருதம் – பலருடன் நல்ல தொடர்பும் உறவும் அவருக்கு இருந்தது.

எங்களை அன்புடன் வரவேற்ற சினிவாசராகவன், "பத்திரிகையில் சேரணும். அவ்வளவுதானே? நாளை காலை பத்து மணிக்கு லஸ் கார்னருக்கு வந்து நில். நான் ஒரு இடத்துக்குக் கூட்டிப் போகிறேன்" என்றார் என்னைப் பார்த்து.

என் சகோதரியின் வீடு மயிலாப்பூரில் இருந்தது. நாங்கள் அங்குதான் தங்கியிருந்தோம்.

மறுநாள் காலை என் அக்காவிடம் ஒரு ரூபாய் – வழிச் செலவுக்கு வாங்கிக் கொண்டு நான் மட்டும் லஸ் கார்னருக்குப் போனேன்.



சொன்னபடி பத்து மணிக்கு வந்து விட்டார், அ.சீ.ரா. பஸ் பிடித்து டி.டி.கே. சாலையில் இறங்கிக் கொண்டோம். இப்போது மியூசிக் அகாடமியாக இருக்கிற இடம் அன்று வை. கோவிந்தன் அவர்கள் நடத்திக் கொண்டிருந்த 'சக்தி' இதழ் அலுவலகமாயிருந்தது.

பிரும்மாண்டமான அவ்விடத்தில் இருந்த கட்டடத்தின் முன்பகுதி பத்திரிகை அலுவலகம்; பின்பகுதி அச்சுக் கூடம். அலுவலகம் ஒரு கல்யாணச் சத்திரம் போலத்தான் இருக்கும். எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும் வந்தவண்ணமும் போன வண்ணமுமாயிருப்பார்கள். சிலர் அங்கேயே சில நாட்கள் (வாரங்கள் கூட!) தங்கியும் விடுவார்கள். மொத்தத்தில் அந்தக் காரியாலயம், எழுத்தாளர்களின் சங்குவார் சத்திரமாக இருந்தது.

என்னை அழைத்துச் சென்ற சினிவாசராகவன், 'சக்தி' அதிபர் வை.கோவிந்தனிடம் அறிமுகப்படுத்திவிட்டு, "சேர்த்துக் கோங்கோ" என்றார், ஒற்றைச் சொல்லாக. அவ்வளவுதான். 'சக்தி'யில் எனக்கு வேலை கிடைத்து விட்டது.

'சக்தி'க்கு கப. நாராயணன் ஆசிரியராக இருந்தார். அங்கிருந்தே வெளியான 'அணில்' என்கிற பத்திரிகைக்குத் தமிழ்வாணன் ஆசிரியர். நான் இரண்டிலும் எழுதவும் பிற வேலைகளை கவனிக்கவும் ஆரம்பித்தேன். குறிப்பாக மொழிபெயர்ப்பில் எனக்கொரு ஈடுபாடு பிறக்கக் காரணமாயிருந்தது சக்தியில் கிடைத்த வாய்ப்புகள்தான்.

வை.கோவிந்தன் ஒரு சரியான பத்திரிகை முதலாளி. யார் வேலையிலும் தலையிட மாட்டார். பத்திரிகை சுத்தமாக, அச்சுப் பிழை இல்லாமல் வர வேண்டும் என்பது மட்டும்தான் அவரது கவலை. ஒரு எழுத்துப் பிழை அவர் கண்ணில் பட்டுவிட்டால் போதும். அச்சுக் கூடத்துக்கு அந்தப் பக்கத்தை எடுத்துக் கொண்டு தாமே போய் விசாரிப்பார். உடைந்த அச்சு ஏதாவது உபயோகமாகியிருந்தால் அந்த ஒரு எழுத்தைத் தேடி எடுத்து தூக்கிப் போடுவார்.

திடீரென்று ஹிக்கின் பாதம்ஸுக்குக் கிளம்பிச் செல்வார். வரும்போது 200, 300 ரூபாய்க்குப் புத்தகங்களை அள்ளி வந்துவிடுவார். அத்தனையையும் அவர் படிப்பார் என்பதில்லை. எங்களுக்கெல்லாம் பிரித்துத் தந்து விடுவார்.

படிக்கிற பழக்கமும் மொழிபெயர்க்கிற ஆர்வமும் அங்கே வலுப்பெற்றதென்றாலும் 'நம்மால் இங்கு கதை எழுத முடியவில்லையே' என்கிற உறுத்தல் எனக்கு இருந்து வந்தது.

கதை எழுதுவது தவிர, 'தனித்துவம்' தெரிகிறபடி வேறு ஏதும் செய்வதற்கும் சக்தியில் எனக்கு வாய்ப்பில்லாததால் விரைவில் எனக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. ஏதாவது வித்தியாசமாக, புதுமையாகச் செய்ய களம் கிடைக்காதா என்று மனம் ஏங்க ஆரம்பித்தது.

கோவையில் பெரியசாமித்தூரன், காலச் சக்கரம் என்றொரு பத்திரிகை தொடங்க விருப்பதாகத் தகவல் வந்தது. உடனே நான் தூரனுக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டேன், அவரது பத்திரிகையில் பணியாற்ற வாய்ப்புக் கேட்டு.

தூரன் என்னை அழைத்தார். போய்ப் பேசினேன். வேலையில் சேரலாம்; நூறு ரூபாய் சம்பளம் என்று முடிவானது. மகிழ்ச்சியுடன் திரும்பி, 'சக்தி' வேலையை ராஜினாமா செய்து விட்டு கோவைக்குப் போய் விட்டேன்.

'காலச் சக்கர'த்தை 'Time' பத்திரிகை

போலக் கொண்டு வரவேண்டுமென்பது தூரனின் விருப்பம். பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களின் தந்தை நாச்சிமுத்து கவுண்டர், சி. சுப்பிரமணியம் போன்றோர் பின்னணியில் தோள் கொடுத்து நின்ற அப்பத்திரிகையில் உதவி ஆசிரியனாகச் சேர்ந்ததும் எனக்குத் தெளிவான முதல் விஷயம் - இங்கும் நாம் கதை எழுத முடியாது என்பதுதான்.

தூரன் என் எழுத்தை மிகவும் மதித்தார். தலையங்கமெல்லாம் எழுதினேன். எனக்கு, கம்யூனிஸ்டுகளின் மேல் கொஞ்சம் 'ஸாஃப்ட் கார்னர்' இருந்தது. அப்போது நடந்த ரயில்வே ஸ்டிரைக்கை ஆதரித்து நான் தலையங்கம் எழுதி விட, சி.எஸ்., தூரனிடம், "யாரப்பா! அங்க யாராவது கம்யூனிஸ்டு இருக்கானா என்ன?" என்று விசாரித்திருக்கிறார்.



"தொகுதிக்குக் குறை கேட்கப் போன தலைவர் தொகுதி மக்களைப் பாத்து இப்படிக் கேட்பார்னு யாருமே எதிர்பார்க்கல....!"

"அப்படி என்ன கேட்டாரு?"

"வானம் பொழியுது... பூமி விளையுது... உங்களுக்கு என்ன குறை?னு கேட்டாரு...!"

- ஸ்ரீதர்

எப்போதும் கடிந்து கொள்ளாத இயல்புடைய தூரன், "என்ன ரங்கராஜ், இப்படிப் பண்ணிப்பிட்டே?" என்று வருத்தப்பட்டாரேயொழிய கொஞ்சம் கூடக் கோபப்படவே இல்லை!

காலச் சக்கரத்தில் சுமார் ஓராண்டு காலம் இருந்தேன். பத்திரிகைத் துறையின் அடிப்படைகள் எனக்குத் தெளிவானது இங்கேதான்.

ஆனால் பணியில் எனக்கு நிறைவு கிட்டவில்லை. சிறப்பாக, மிகவும் சிறப்பாக, புதிது புதிதாக ஏதாவது செய்ய வேண்டும் என்கிற அரிப்பு இருந்து கொண்டிருந்தது.

ஆகவே, அந்த வேலையையும் விட்டு விட்டு, கும்பகோணத்துக்கே சென்று விட்டேன்.

கோவையில் இருந்த காலத்தில் எனக்கு நேர்ந்த பெரிய நன்மை, நா. மகாலிங்கத்தின் நட்பு கிடைத்ததுதான். மகாலிங்கம் ஒரு பெரிய படிப்பாளி. உலக இலக்கியங்கள் அனைத்தையும் அவை வெளியாகிற சூட்டிலேயே படித்துவிடும் ஆர்வம் மிக்கவர்.

பொள்ளாச்சியிலிருந்து வாரம் ஒருமுறை அவர் காரில் கோவை வருவார். வரும்போது, ஒரு பெட்டி நிறையப் புத்தகங்களை எடுத்து வந்து எனக்குத் தருவார். அவர் அடுத்த வாரம் வருவதற்குள் நான் அந்தப் பெட்டி முழுவதையும் படித்து முடித்திருப்பேன். அவரிடம் அடுத்தப் பெட்டியை வாங்கிக் கொண்டு, 'படித்த பெட்டி'யைத் திருப்பித் தருவேன். சுமார் ஒரு வருட காலமும் இந்தப் பெட்டிப் பரிமாற்றம் நடந்தது.

பத்திரிகை, பத்திரிகை என்று அலைந்தவன், எந்தப் பத்திரிகையிலும் பொருந்தி இருக்க மாட்டேன் என்கிறானே என்று என் வீட்டாருக்குக் கவலை வந்து விட்டது. போதாக்குறைக்கு எனக்குத் திருமணம் வேறு ஆகிவிட்டது. என் சகோதரியின் மகள் கமலாவைத்தான் நான் கைப்பிடித்திருந்தேன். இருபத்தி மூன்று வயது. சுமார் ஒன்றரை வருட காலம் கும்பகோணத்தில் வேலையற்றுத் திரிந்து கொண்டிருந்தேன்.

நமது விருப்பப்படி செயல்பட வேண்டுமென்றால் சொந்தப் பத்திரிகை ஆரம்பிப்பதுதான் சரி என்று தோன்றியது. இப்படியொரு எண்ணம் வந்தபின் சும்மா இருக்க முடியுமா? 'வானரசேனை' என்றொரு பத்திரிகையைத் தொடங்கினேன்.

ஆனால் 'சேனை' நடக்க அல்ல; தவழவே சிரமப்பட்டது. அதையும் கையோடு இழுத்து மூட வேண்டியதாகி விட்டது.

எதிர்காலம் பற்றிய பயம், இனம்புரியாத கவலை சூழ்ந்த நேரம் அது.

குமுதம் பதிப்பாளர் பார்த்தசாரதியின் தந்தை, என் மாமனாருக்கு நண்பர். இருவரும் மயிலாப்பூர் கேசவப் பெருமாள் கோயில் வேதபாட கோஷ்டிக்காரர்கள். அவரிடம் என் மாமனார் என்னைப் பற்றிச் சொல்லி, குமுதத்தில் சேர ஏற்பாடு செய்ய முடியுமா என்று கேட்டார்.

சாதாரண இடத்து ரெகமண்டேஷனா? உடனே வரச் சொன்னார்கள். குமுதம் அலுவலகத்துக்குப் போனேன். அறிமுகம் முடிந்து, கொஞ்சம் விசாரித்து விட்டு, மறுநாளே வேலையில் சேரச் சொல்லி விட்டார்கள் - குமுதத்தில் அல்ல; ஜிங்லி என்கிற குழந்தைப் பத்திரிகையில்.

ஆனால் என் கண்களோ குமுதத்தின் மீதுதான் இருந்தன. 'சக்தி'யில் என்னுடன் பணியாற்றிய தமிழ்வாணன் இங்கே 'கல்கண்டு' ஆசிரியராக இருந்தார்.

நான், எடிட்டர் எஸ்.ஏ.பியிடம் என்னைக் குமுதத்தில் சேர்த்துக் கொள்ளச் சொல்லிக் கேட்டுப் பார்த்தேன். "முதல்ல கதை எழுதிக் கொடுங்கோ" என்று சொல்லி விட்டார்.

குமுதத்தில் இரண்டு மூன்று கதைகள் எழுதினேன். பிறகு ஜிங்லி நின்று போனதும் கல்கண்டில் தமிழ்வாணனுக்கு அஸிஸ்டெண்டாகச் சில காலம் இருந்துவிட்டு, அதன் பிறகே குமுதத்தினுள் நுழைய முடிந்தது.

எடிட்டருக்கும் எனக்கும் மூன்று, நான்கு வயது வித்தியாசம்தான் இருக்கும். ஆனால் அறிவிலும் திறமையிலும் பத்திரிகைத் துறையில் இருந்த ஞானத்திலும் அவர் எட்ட முடியாத உயரத்தில் இருந்தார். அமைதியான சுபாவம். கூர்மையான நோக்கு. தீர்க்கமான சிந்தனை. அபாரமான தெய்வபக்தி. உலக இலக்கியங்களை விரல் நுனியில் வைத்திருக்கிற லாகவம். தம்மை ஒளித்துக் கொண்டு பத்திரிகையை முன்னிறுத்திய விசால இதயம். ஒரு சரியான குருவிடம் வந்து சேர்ந்த திருப்தி என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

பத்திரிகை வேலையில் மூழ்கி விட்டால் இரவு – பகல் தெரியாது. நள்ளிரவு பன்னிரண்டு வரை கூடப் பணியாற்றி விட்டு, அதிகாலை ஆறு மணிக்கு மறுபடியும் அலுவலகத்துக்கு அதே உற்சாகத்துடன் சென்று பணியாற்றிய அனுபவங்கள் உண்டு.

குமுதம் தொடங்கிக் கொஞ்ச காலமே ஆகியிருந்த சமயம் அது. நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தைத் திறந்து வைத்து, நாட்டுக்கு அர்ப்பணிக்கப் பண்டிதர் நேரு வந்திருந்தார். எல்லா பத்திரிகைகளிலிருந்தும் நிருபர்கள் வந்தார்கள். குமுதத்திலிருந்து நான் சென்றிருந்தேன்.

இரவு கெஸ்ட் ஹவுஸில் பகீரதன் என்னைச் சந்தித்தார். அவர், கல்கியின் துணையாசிரியராக இருந்த நேரம் அது.

பேசிக் கொண்டிருந்தபோது சட்டென்று அவர், "குமுதத்தின் சர்குலேஷன் என்ன?" என்று கேட்டார்.

நான் சொன்னேன்.

"கல்கி எவ்வளவு போறது தெரியுமா?" என்றவர் குமுதம் சர்க்குலேஷனில் இருமடங்கு எண்ணைக் குறிப்பிட்டார்!

ஊர் திரும்பி, விழா விவரங்களைப் பேசியபின் ஆசிரியரிடம் நான், பகீரதன் சொன்னதைச் சொன்னேன் : "கல்கி நாப்பதாயிரம் போறதாம் சார்!"

ஆசிரியர் சில விநாடிகள் மௌனமாயிருந்தார். பிறகு மெல்லிய குரலில், "எப்பவும் இரண்டாவது இடத்தில் இருக்கிறதுதான் நல்லது. யாரும் கண் வைக்கமாட்டார்கள், பாருங்கள்!" என்றார் சிரித்தபடியே.

அது எனக்காக – நான் சமாதானமடையச் சொன்னதுதானோ என்று பிறகு பலமுறை நினைத்துப் பார்த்திருக்கிறேன்.

ஆனால், ஆசிரியர் மனத்தில் ஏதோ ஒரு தீர்மானம் விழுந்திருக்க வேண்டும். மெல்ல மெல்ல உயர்ந்து ஒன்று, இரண்டு, மூன்று, நான்கைத் தாண்டி, ஐந்து லட்சம் பிரதிகளைத் தொடுகிறவரை தேக்கமே இல்லாத சீரான வளர்ச்சி இருந்தது. அது எடிட்டரின் உழைப்பு; தன்னம்பிக்கை!

"விசிட்டர்ஸ் பெஞ்சில் 20+1 உட்கார்ந்திருக்காங்க டாக்டர்!"
"இருபது ஆண் நோயாளிகளும் ஒரு பெண் நோயாளியுமா?"
"ஊஹூம். இருபது மெடிக்கல் ரெப்ரஸெண் டேடிவ்களும் ஒரு நோயாளியும்!"

– உ. ராஜாஜி



குமுதத்தில் சேர்ந்தவுடன் தனி வாழ்க்கை – அலுவலக வாழ்க்கை என்று பிரித்தே பார்க்க இயலாதபடி பத்திரிகைப் பணியுடன் இரண்டறக் கலக்கும், 'பேரின்ப நிலை' வாய்த்தது.

நான் சேர்ந்த சில வருடங்களிலேயே ஜ.ரா. சுந்தரேசனும் புனிதனும் குமுதத்துக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். எங்கள் மூவருக்கும் பத்திரிகைப் பணியில் நோகாமல் பயிற்சியளித்தார் ஆசிரியர்.

குமுதம், வாசகர்களுக்கான பத்திரிகை – ஆகவே வாரம்தோறும் வாசகர்கள் விரும்பும்வண்ணம் வேறு வேறு களங்களில்

ஐந்து சிறுகதைகள் வெளியாக வேண்டும் என்பார் ஆசிரியர். ஒரு காதல் கதை, ஒரு கிராமியக் கதை, ஒரு கிரைம் கதை, ஒரு நகைச்சுவைக் கதை, நகரப் பின்னணியில் ஒரு கதை - இப்படி ஐந்து கதைகள். இதில் நாங்கள் மூவரும் ஆளுக்கொரு கதை எழுத வேண்டும். மிச்சமிருக்கும் இரண்டு 'ஸ்லாட்' களுக்கு வெளியார் கதைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்வோம்.

திங்கட்கிழமை காலை ஆளுக்கொரு கதையை அவரிடம் தந்தாக வேண்டும்.

ஆசிரியர் எங்கே போனாலும் நிறைய கதைப் புத்தகங்களை வாங்கி வந்து படிக்கத் தருவார். உலக எழுத்தாளர்கள் கையாளும் பாணிகளைக் கூர்ந்து கவனித்து, வித்தியாச மான முறையில் அதே போல நாங்களும்



**''உங்க அப்பாவுக்கு ஜலதோஷம் பிடிச்சா மட்டும் எதுக்குடா ரெண்டு பாட்டில் தைலம் வாங்கிட்டுப் போறேன்னு அடிக்கடி கேட்பியே! இப்ப புரியுதா?!''**

**- பாலு**

எழுத வேண்டும் என்று வற்புறுத்தி, எழுத வைப்பார்.

அவர் விரும்பும் வண்ணம் எழுதுவது சவாலாகவும் சுவாரஸ்யமாகவும் இருக்கும்.

ஒரு கதையைச் சிறப்பாக எழுதி விட்டால் மனதாரப் பாராட்டுவார்; உற்சாகப்படுத்துவார்.

கதை விஷயம் மட்டுமல்ல; வேறெந்த விஷயமானாலும் நேர்த்தியாகச் செய்வது தான் அவரிடம் பாராட்டுப் பெற ஒரே வழி.

ஆசிரியரைக் கூர்ந்து கவனித்து வந்த நான், எந்த நேரத்தில் அவர் என்ன நினைப்பார் என்பதைப் புரிந்து கொள்ளத் தொடங்கினேன். அவரே சில சமயங்களில், ''நான் மனத்தில் நினைப்பதை ரங்கராஜன் அப்படியே வாங்கிக் கொண்டு விடுகிறார்'' என்று சொல்கிற அளவுக்கு இது விஷயத்தில் முன்னேறியிருந்தேன்.

பத்திரிகைப் பணியில் இருப்பவர்கள், சொந்தப் பிரச்னைகளை - சோகங்களைப் பொருட்படுத்தக் கூடாது என்பது ஆசிரியரின் கருத்து.

ஒரு சமயம் - அது நான் படகு வீடு தொடர் எழுதிக் கொண்டிருந்த நேரம். அந்த வாரத்துக்கான அத்தியாயத்தைப் பாதிதான் எழுதியிருந்தேன். முடித்து அனுப்ப வேண்டிய நிலையில் என் அம்மாவின் சிராத்தம் வந்து விட்டது.

சரி; சிராத்தத்தை முடித்துவிட்டு வந்து எழுதித் தரலாம் என்று எண்ணிக் கொண்டு வந்து விட்டேன்.

மாம்பலத்தில் சிராத்த காரியங்கள் நடந்து கொண்டிருந்தன.

திடீரென்று சுந்தரேசன் வந்து, "எடிட்டர் வந்திருக்கார்" என்றார்.

என்னவோ, ஏதோ என்று அவசரமாக ஓடினேன். தெரு முனையில் காரில் அமர்ந்திருந்தார் எடிட்டர். என்னைப் பார்த்ததும், "ஏறுங்கள் வண்டியில்" என்றார்.

யாரிடமும் சொல்லிக் கொள்ளக் கூட அவகாசமில்லை. அப்படியே வண்டியில் ஏறி விட்டேன்.

எடிட்டரே காரை ஓட்டிச் சென்றார். அலுவலகத்தினுள் நுழைகிற வரை ஒரு பேச்சு இல்லை. கடும் கோபமாக இருக்கிறார் என்பது மட்டும் புரிந்தது.

அவரது அறைக்குள் நுழைந்ததும்தான் பேச ஆரம்பித்தார்.

"ஃபாரம் போயாக வேண்டும். தொடர் கதை அத்தியாயத்தில் பாதி மீதி வைத்து விட்டுப் போனால் என்ன அர்த்தம்? புத்தகம் சரியான நேரத்தில் வந்தாக வேண்டாமா?" என்று தொடங்கி அரை மணி நேரம் பொரிந்து விட்டார்.

அவர் கோபித்துக் கொள்வதில் எப்போதும் நியாயம் இருக்கும். கடமையிலிருந்து தவறினால்தானே அவருக்குக் கோபம் வருகிறது?

ஆகவே அவர் கோபித்துக் கொள்ளும் போதெல்லாம் நான் ஒரு பாடம் கற்றுக் கொண்டேன்.

கோபம் போலவே பாராட்டிலும் அவரிடம் வஞ்சனை கிடையாது. ஹென்றி ஷாரியரின் 'பாப்பில்யானை' நான் 'பட்டாம்பூச்சி'யாக மொழிபெயர்த்தேன். அது லட்சக்கணக்கான வாசகர்களைக் கொள்ளை கொண்டு போனது.

அது நூலாக வந்த போது சுஜாதாவை ஒரு முன்னுரை எழுதித் தரச் சொல்லிக் கேட்டேன்.

பட்டாம்பூச்சியை சிலாகித்து எழுதுவார்

என்று பார்த்தால், அவர் என்னைப் புகழ்ந்து தள்ளி ஒரு முன்னுரை எழுதி விட்டார்.

ஆசிரியரிடம் கொண்டு போய்க் காட்டினேன். நானே கூச்சப்படும்படியான ஒரு பாராட்டுரை அது.

"அப்படியே பிரசுரியுங்கள். பிரமாதமாக எழுதியிருக்கிறார்'' என்றார் ஆசிரியர். அவரது மறு பெயர் – பெருந்தன்மை!

ஒரு பலமான, நிச்சயமான பின்புலம் வாய்த்த பிறகு புதிது புதிதாகப் பரீட்சைகள் – சமயத்தில் விஷப் பரீட்சைகளுங்கூட செய்து பார்க்க முடிந்தது என்னால்.

ஆசிரியர் சிறிது காலம் பத்திரிகைப் பணியிலிருந்து விலகி இருந்தார். அதாவது, தலையங்கம், அரசு பதில்கள், சினிமா விமர்சனம் போலச் சில பொறுப்புகளை மட்டுமே அவர் வைத்துக் கொண்டு, எனக்கு 'இணை ஆசிரியராக'ப் பிரமோஷன் கொடுத்து, பத்திரிகையைப் பார்த்துக் கொள்ளச் சொன்னார்.

பெரிய வாய்ப்பு அது! அத்தனை வருடங்களாக நான் என்ன பயின்றிருக்கிறேன் என்று நானே மீள்பார்வை பார்த்துக் கொள்ள முடிந்தது அப்போது.

பல புதிய பகுதிகள் தொடங்கப்பட்டன. நான் 'லைட்ஸ் ஆன்' பகுதியை ஆரம்பித்தேன். ஒரு நிருபரை ஸ்டூடியோக்களுக்கு அனுப்பி, செய்தி சேகரித்து வரச் சொல்லி, அதை ஒரு புதுவிதமான நடையில் நிறைய ஆங்கிலக் கலப்புடன் எழுதி வெளியிட்டேன்.

முதல் வாரம். 'லைட்ஸ் ஆன்' ப்ரூஃபை ஆசிரியருக்கு அனுப்பி விட்டு உதைப்புடன் காத்திருந்தேன்.

அவர் வீட்டிலிருந்து போன் செய்தார்.

"வினோத் என்றொருத்தர் லைட்ஸ் ஆன் என்றொரு கட்டுரை எழுதியிருக்கிறாரே, யாரது?'' என்று கேட்டார்.

"ஏன் கேட்கிறீர்கள்?''

"இல்லை, சொல்லுங்கள், யாரது?''

"நான்தான்!'' என்றேன் தயக்கமுடன்.

"சே! அவ்வளவுதானா? யாரோ புது எழுத்தாளரை நீங்கள் கண்டுபிடித்து விட்டீர்கள் என்றல்லவா நினைத்தேன். இதுவும் நீங்களேதானா?'' என்றார்.

டபிள்யூ. ஆர். சொர்ணலதா, டி. துரைசாமி, மாலதி, கிருஷ்ணகுமார், முள்றி, அவிட்டம் எனப் பல பெயர்களில் அப்போது நான் எழுதிக் கொண்டிருந்தேன். 'வினோத்' எனக்கு நானே போட்டுக் கொண்ட மற்றொரு புனைபெயர்.

"சே! இதுவும் நீங்கள்தானா?'' என்று ஆசிரியர் கேட்டது மறைமுகமான பாராட்டாகவே எனக்குப்பட்டது. என் இத்தனை வருடப் பத்திரிகை வாழ்வில் நான் உயிரை விட்டு எழுதிய பகுதி அந்த 'லைட்ஸ் ஆன்'.

ஆசைப்பட்டு, பத்திரிகைத் துறைக்கு வந்து ஐம்பது வருடங்களுக்கு மேல் ஓடி விட்டது.

இதைச் செய்திருக்கிறோம், சாதித்திருக்கிறோம் – அல்லது செய்கிறோமா? சாதிக்கிறோமா? என்பதைக் கூட கவனிக்காமல் 'செய்து கொண்டிருப்பது' மட்டுமே வாழ்க்கையாக அமைந்து விட்டது. இதுதான் சரி; இதுதான் முறை என்பது எடிட்டர் எஸ்.ஏ.பி. தன் வாழ்க்கை மூலம் எனக்கு உணர்த்திய பாடம். அவர் போல ஒரு குரு அமைந்ததுதான் என் வெற்றியின் – அப்படியொன்று உண்டாயின் – மூலகாரணம்.

என் அதிர்ஷ்டம், என் குரு எனக்குத் தற்செயலாகவே கிடைத்து விட்டார். எல்லோருக்கும் அது எப்படி அமையும்? என்று கேட்கலாம்.

ராமகிருஷ்ண பரமஹம்சரின் குட்டிக் கதை ஒன்று உண்டு. ஒரு குழந்தை தன் அம்மாவிடம் சொன்னதாம் : "அம்மா, நான் படுத்துக் கொள்கிறேன். எனக்குப் பசிக்கிற போது என்னை எழுப்பு!''

அதற்கு அந்தத் தாய் சொன்ன பதில் : "கவலைப்படாதே! உன் பசியே உன்னை எழுப்பி விடும்!''

குருவைத் தேட வேண்டும்; நல்ல குரு அமைய வேண்டும் என்கிற பசி இருந்தாலே போதும். தானாக குரு தேடி வருவார்!

சந்திப்பு : **ஔரங்கசீப்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

**"நம்ம தலைவர் ரொம்ப ஜாலி பேர்வழி...''**

**"எப்படி?''**

**"தமிழ்ப் புத்தாண்டுக்கு இலவச நைட்டி கொடுக்கணும் என்கிறாரே!''**



**– எஸ். மோகன்**

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கிரகங்கள் ரொம்ப சாதகமாவே இருக்குங்க. ஏதாவது முக்கியமான ஜோலி இருந்தா, உடனே ஆரம்பிங்க. சொந்தக்காரங்களும் நண்பர்களும் தாராளமா உதவுவாங்க. அரசாங்கத்தால அனுகூலம் உண்டு. பழைய பாக்கிகள் வசூலாகும். வாரக் கடைசில எங்கியாவது ஜாலி உலா போற சான்ஸ் இருக்கு. தேவையில்லாத விஷயங்களுக்காக மனசைப் போட்டுக் குழப்பிக்கறதை மட்டும் விட்டுடுங்க. இந்த வாரம் மேஷ ராசிக்கார இளவயசுப் பசங்களுக்குக் கல்யாண யோகம் அடிக்க சான்ஸ் இருக்கு. சிலருக்கு வெளிநாடு போற வாய்ப்பும் இருக்கு. சிறு தொழில், விவசாயம் பண்றவங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கும்; நினைச்சது நடக்கும்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்களுக்கு இப்ப தேவை கூடுதல் சாமர்த்தியம். நண்பர்களானாலும் சரி; மேலதிகாரிகளானாலும் சரி; உங்க வளர்ச்சியைப் பார்த்துப் பொறாமைப் படுவாங்க. ஃப்ரெண்ட்லி அணுகுமுறையைத் தவறாம பிரயோகிக்கணும். பணி மாறுதல் எதிர்பார்க்கறவங்களுக்கு, அது கொஞ்சம் தள்ளிப் போகும். ஆனா எதிர்பாராத சில பயணங்கள் வந்து சேரும். பெண்களுக்கு கொஞ்சம் நேரம் சரியில்லை. அலுவலகத்துல சில பிரச்னைகளை சந்திக்க வேண்டி வரலாம். பண இழப்புக்கும் சான்ஸ் இருக்குது. ஒரு கடிதம் வந்து உங்களைக் குஷிப்படுத்தும்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்களுக்கென்னங்க? ராஜா வீட்டுப் பூனைக்குட்டி.. அத்தனை கிரகங்களும் சப்போர்ட் பண்ணும்போது பிரச்னையா? நோவே பாஸிபிள்! நடக்காதுன்னு நினைச்சிட்டிருக்கற காரியமெல்லாம் கூட மளமளன்னு நடந்து முடிஞ்சிடும். வீடு, மனை வாங்கற யோகம் இருக்கு. அரசியல்வாதிகளுக்கும் ரியல் எஸ்டேட் பிஸினஸ் பண்றவங்களுக்கும் இது அமோகமான வாரம்! பெண்களுக்குத் திருமண யோகம் கூடுது! ஒரு முக்கியமான பிரச்னையில நீங்க எடுத்துக்கற அக்கறை, கவனம் மூலமா, மேலதிகாரியோட பாராட்டைப் பெறுவீங்க. சிலருக்குப் பிரமோஷன் சான்ஸும் இருக்கு. புண்ணிய யாத்திரை போகிற வாய்ப்பு, பார்ட்டிங்கள்ல கலந்துக்கற வாய்ப்பு – இந்த ரெண்டும் அநேகமா பலருக்கு இந்த வாரம் உறுதி.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உணர்ச்சி வசப்பட்டு எதையாவது பேசிட்டு, சிக்கல்ல மாட்டிக்காதீங்க. மேலதிகாரிகள் பற்றி விமர்சனம் வேணாம். நீங்க பேசறதை அப்படியே போய் வத்திவெக்க ஒரு கோஷ்டி காத்துக்கிடக்குது! கவனம்! வெளியிடங்கள்ல சாப்பிட்டு, வயிற்றைக் கெடுத்துட்டு, "அம்மா நோவுதே! ஐயா நோவுதே!"ன்னு கஷ்டப்படுவீங்க. வீட்டுலயோ, பணம் பத்தலைன்னு சம்சாரம் மூஞ்சியைத் தோள்ல இடிச்சி, மூக்கை நொடிப்பாங்க. சமாளிங்க! ஆனா, கடன் மட்டும் வாங்கிடாதீங்க. பின்னால சிரமப்படுவீங்க. யாருக்கும் ஜாமீன் கையெழுத்துப் போடாதீங்க. வழக்கு எதும் நிலுவைல நிக்குதா? அப்படியே நிக்கட்டும். வாய்தா வாங்கிடுங்க. இப்ப ஹியரிங்குக்கு வந்ததுன்னா, தீர்ப்பு உங்களுக்குச் சாதகமா இருக்காது.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

போன வாரம் போல அத்தனை கஷ்டப்படமாட்டீங்க. நிதி நிலைமை சீராயிட்டு வரும். அதுவே பாதி பிரச்னை குறைஞ்சா மாதிரிதானே! நீங்க போடற திட்டம் எல்லாமே வெற்றி அடையாதுன்னாலும் சில முக்கியமான விஷயங்கள்ல உங்களுக்கு வெற்றி நிச்சயம்! அலைச்சலும் லேசான உடல் நலக் குறைவும் இருக்கும். அண்ணன் தம்பிங்க உதவுவாங்க. ஆனா சில உறவினர்களோட வாக்குவாதம் செய்து, பகை வளர்த்துக்கற சந்தர்ப்பம் வரும். கவனம்! முதலீடுகள், ஸ்பெகுலேஷன், ரேஸ் மாதிரியான விஷயங்கள் எதுவும் இப்ப வேண்டாம்! பெற்றோர் உடல் நலத்துலயும் அக்கறை காட்டுங்க!



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பெரும்பாலான கிரகங்கள் உங்களை பலமா சப்போர்ட் பண்ணுதுங்க. அதனால, கவலை இல்லாம முன்னேற்றத்தை கவனிங்க. தொழில் ரீதில உங்களோட வளர்ச்சி பலரைப் பொறாமைக்கு உள்ளாக்கும்னா பார்த்துக்கங்களேன்! அதே சமயம் வீட்டுலயும் சில நல்ல காரியங்களுக்கு அறிகுறி தெரியும். அநேகமா உங்களுக்குக் கல்யாணம் ஃபிக்ஸ் ஆகலாம்! 'அட சாமி, கல்யாணம் ஆயிடுச்சிங்



**மேஷ ராசிக்காரரான பிரசாந்துக்குப் பழைய பாக்கிகள் வசூலாகுமாம்!**

களே'ங்கதீங்களா? அப்ப, நோ டவுட்! அப்பா வாகப் போறீங்க. எழுத்தாளர்களுக்கும் பத்திரி கையாளர்களுக்கும் இது ஆதாயமான கால கட்டம். தொட்டது துலங்கும். சிலருக்கு வெளி நாடு சான்ஸ் கிடைக்கலாம். பெண்களுக்கு புதிய பொருள் வாங்கும் யோகம் இருக்கு. சிலர் புருஷர்களை வாங்குவாங்க!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

பெரிய வி.ஐ.பிங்களோட தொடர்பு ஏற்படற சான்ஸ் இருக்குங்க. அது உங்க வருங்கால வளர்ச்சிக்கு ரொம்ப உப யோகமா இருக்கும். பொருளாதார ரீதில நல்ல வலுவாவே இருக்கீங்க. சிலருக்கு கார், ஸ்கூட்டர் மாதிரியான சொகுசு சமாசாரங்கள் பரிசாகக் கிடைக்கவும் சான்ஸ் இருக்கு. வீட்டுல ஏதோ மங்களகரமான காரியம் நடக்கப் போவுது. செல வைப் பார்க்காதீங்க. திருமதிகள் விரும்பறதை வாங்கிக் கொடுங்க. அரசியல்வாதிகளுக்குப் பொன்னான வாய்ப்புகள் காத்திருக்கு. (இடைத் தேர்தல் வந்துடுமா?) கொடுக்கல், வாங்கல் மட்டும் வேணாம். வாரக் கடைசில ஓர் அதிர்ஷ்ட வாய்ப்புக்குக் காத்திருங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

குரு ஸ்ட்ராங்கா இருக்கறதால சங்கடங்கள் வந்தாலும் சமாளிப்பீங்க. ஆனா லும் காரியத் தடங்கல்களைத் தவிர்க்க முடி யாது. சினிமா, இசைத் துறையைச் சேர்ந்தவங்க, போட்டி, பொறாமைகளைச் சமாளிக்க வேண்டி வரும். பெண்களுக்குப் பிரச்னை இல்லை. அவங்க வெச்சதுதான் சட்டம். சிலருக்கு ட்ரான்ஸ்ஃபர் அல்லது வெளியூர் பயணங்கள் இருக்கலாம். வாரக் கடைசில நண்பர்கள் வருகை, வீட்டுல விசேஷம் ஏதாவது நடக்கலாம். போலீஸ்காரங்க கொஞ்சம் ஜாக்கிரதையா இருக் கணும். மாமூலான விஷயங்கள் பிரச்னை உண்டு பண்ணிடலாம், கவனம்!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்தி ராடம் முதல் பாதம் வரை)*

அகலக்கால் வைக்காதீங்க. ஏன்னா, பெரிசா பிளான் பண்ணிட்டு, ஓர்க் அவுட் ஆகாம போற சான்ஸ் இருக்கு. பேச்சு, செயல் எல்லாத்துலயும் கவனம் முக்கியம். வீண் பழி சுமக்க வேண்டி வரலாம். சிலருக்கு விஷ ஜந்துக்களாலோ, வாகனங்களாலோ ஆபத்து இருக்கலாம். பரணை க்ளீன் பண்றது, டூவீலர்ல 60க்கு மேல ஸ்பீட்ல போறதெல்லாம் வேணாம்! பண விரயம், உடல் நலக்குறைவு இருக்கும். கூட வேலை பார்க்கறவங்களோட வாக்குவாதம் மட்டும் வெச்சுக்காதீங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நீங்க இப்ப படுசுவனமா இருக்க ணும். எந்த கிரகமும் சாதகமா இல்லை. வீட்டுல ஏதாவது சாந்தி ஹோமம் செஞ்சா கூட நல்லது! யாருக்கும் வாக்குக் கொடுக்காதீங்க. பண விஷ யத்துல எச்சரிக்கையா இல்லாட்டா நஷ்டமா யிடும். புதிய தொழில் தொடங்கறது, முதலீடுகள், வீடு வாங்கற யோசனை – எதுவா இருந்தாலும் இப்ப வேணாம். சிலருக்கு மருத்துவச் செலவுகள் எக்கச்சக்கமா வரலாம்! முன்பின் தெரியாதவங் களை நம்பி எந்த விஷயத்துலயும் இறங்காதீங்க. சினிமாக்காரங்க ரொம்ப ஜாக்கிரதையா இருக் கணும். விபத்துகளுக்கும் இழப்புகளுக்கும் வாய்ப்பு அதிகம்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்களுக்கென்னங்க? குடும்பத்துல யும் சரி; வெளியிலயும் சரி சப்போர்ட் பண்ண ஒரு கூட்டமே இருக்குது! நினைச்ச காரியம் நடக் கும். உல்லாசமா பொழுது கழியும். எழுத்தாளர் கள், ஓவியர்கள், கம்ப்யூட்டர் ஆசாமிங்களுக்குப் புதிய வாய்ப்புகள் பல வரும்! வெளியூர் பயணங் களும் ஆதாயமாவே இருக்கும். பணப் பிரச்னை இல்லைன்னாலே பெரிய நிம்மதியாச்சே! வீட்டு உபயோகப் பொருள்கள் சிலது வாங்குவீங்க. மூத்த மகனால பேரும் புகழும் வந்து சேரும்! விளையாட்டு வீரர்னா, கேட்கவே வேணாம் – நம்பர் ஒன் நீங்கதான்!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

திறமை வெளிப்படற வாரம்தான். எதிலும் சுலபமா ஜெயிச்சிட முடியும்தான். ஆனாலும் உங்க முன் கோபமும் அஜாக்கிரதை யும் காரியத்தைக் குட்டிச் சுவராக்கக் காத்துட் டிருக்குன்றதை மறந்துடாதீங்க. பெரியவங்க கிட்ட மரியாதைக் குறைவா நடந்துக்காதீங்க. ஆபீஸ்ல மேலதிகாரிகளை அனுசரிச்சி நடந்துக் கறது மூலம் பல காரியங்களை சாதிச்சிக்கலாம். சிலருக்கு வெளியூர் இட மாறுதல் அல்லது, வெளியூர்ப் பயணம் வரலாம். பயணத்துல எச் சரிக்கையா நடந்துக்க வேண்டியது அவ சியம். ●

**பிப்ரவரி 24 முதல் மார்ச் 2 வரை**

# பல்லி

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள், ஒவ்வொருத்தருக்கும் பெண் பார்க்கப் போனபோது ஏதாவது ஒரு மறக்க முடியாத அசாதாரணமான, வேடிக்கையான சம்பவம் நடந்திருக்கும். எங்கப்பா, அம்மாவை பெண் பார்க்கப் போனபோது, அப்படித்தான் உட்கார்ந்திருந்த ஊஞ்சல் சங்கிலி அறுந்து கீழே விழுந்து விட்டாராம். என் நண்பனுடைய அப்பா, பையனுக்கு ஃப்ளூட் வாசிக்கத் தெரியும் என்று சொல்லப்போய், பெண்ணின் அப்பா அறுபத்து மூவரில் வாங்கிய புல்லாங்குழலைக் கொடுத்து வாசிக்கச் சொல்லி விட்டாராம். அதிலிருந்து அவன் எங்கே பெண் பார்க்கப் போனாலும் புல்புல் தாராதான் தெரியும் என்பான். அந்த மாதிரிதான் நான் கலாவைப் பெண் பார்க்கச் சென்றபோது ஒரு பல்லியால் அல்லல் பட்டேன். ஆமாம் பல்லியேதான். ஆரம்பமே சகுனம் சரியில்லை.

அப்பா போய் நடராஜுகிட்ட டாக்ஸிக்கு, "ஆறு மணிக்கு கரெக்டா வந்துருப்பா" என்று சொல்லப் போக, அவன் "ஆறு மணிக்கு மேல 'பாடி' கொடுக்க மாட்டாங்களே சார், எந்த ஆஸ்பத்திரி? சரியா கேட்டீங்களா?" என்றானாம். அவன்தான் போன வாரம் தாத்தாவுக்கு சீரியஸாய் போனபோது, ஆஸ்பத்திரிக்கு கூட்டிப் போனவன். தாத்தா ஒரு நாள் ஆக்ஸிஜனுக்குப் பிறகு, ஆட்டோ வேண்டாம் என்று நடந்தே வீடு வந்தது அவனுக்குத் தெரியாது. தவிர, நடராஜு டாக்ஸி-ஜானவாச ஊர்வலம் தற்காலத்தில் வழக்கொழிந்து போன பிறகு ராயப்பேட்டா, அப்பல்லோ, ராமச்சந்திரா என்று தடம் மாறியவன்.

எங்கோ தாம்பரம் தாண்டி சேலையூரோ சோலையூரோ என்று தேடி, ஏராளமான காலி நிலங்களையும் பனைமரங்களையும் கடந்து அவர்கள் வீட்டைக் கண்டு பிடித்த போது ட்யூப் லைட் போடும் வேளையாகி விட்டது. நாங்கள் உள்ளே போய் கவரோரா சோபாவில் தொற்றிக் கொண்டு, கலாவினுடைய அக்கா பையன் தனக்கும் இடம் வேண்டும் என்று கட்டாய விருப்பம் தெரிவிக்க, "அதனால என்ன, சின்னப் பையன் தானே" என்று தாராளமாக இடம் கொடுத்து நகர்ந்து, ட்யூப் லைட்டின் கீழே உட்கார்ந்த போதுதான் விதி சிரித்தது.

அப்பா, "வெயில் இந்த வருஷம் ரொம்ப அதிகம் இல்ல" என்று ஆரம்பிக்க, நான் மையமாக தலை அசைத்துக் கொண்டு புன்னகையுடன் ப்ரசன்னமாக எங்கோ உத்தரத்தில் வட மேற்கு மூலையைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதுதான் முதல் தப்பு. தலைக்கு மேல் முதுமலை வன விலங்கு சரணாலயம் மாதிரி கோடானு கோடி ஜீவ ராசிகளுக்குப் புகலிடம் கொடுத்த ட்யூப் லைட்டையோ, பின்னால் பதுங்கி இருந்த பொல்லாத பல்லியையோ கவனிக்கவில்லை.

நான் மேலே சுவரை மேய்வதை கவனித்துவிட்ட வருங்கால மாமியார், மாட்டியிருந்த முத்து மணியில் செய்த மான், அலுமினியம் பெயிண்டிங், பத்திக், தஞ்சாவூர் பெயிண்டிங் எல்லாம் சுட்டிக்காட்டி, "கலா தான் செய்தது" என்றாள்.

நான், மான் என்று சொல்லப்பட்ட கன்றுக் குட்டி போல இருந்த படத்தைப் பார்த்துக் கொண்டிருக்க, அதற்குள் அந்த பல்லிக்கு அவசரம் போலும், பாத்ரூம் வரை போயிருக்கக் கூடாதா!

என் கழுத்தின் பின்புறம் காலருக்கு இடைவெளியில் திடீரென்று இரண்டு 'சொட் சொட்'. நான் திடுக்கிட்டு மேலே திரும்பிப் பார்க்க, ஜயண்ட் சைஸில் நல்ல டார்க் ப்ரவுன் கலரில் ஒரு பல்லி.

நான் பொதுவாக 'த்சோ த்சோ' என்று துடைத்துக் கொள்ள, "என்ன ஆச்சு சார்? ஃபேன் காத்து பத்தலயோ? டேய் அந்த டேபிள் ஃபானை எடு".

நான் எப்படிச் சொல்வது என்று தெரியாமல், கையைக் காண்பித்து பாத்ரூம், பல்லி என்று உளற, அவர் எனக்குத்தான் பாத்ரூம் போக இச்சை என்று தப்பாகப் புரிந்து கொண்டு, "அதனால என்ன, இது உங்க வீடு மாதிரி நெனச்சுக்கங்க. இதுக்கென்ன சங்கோஜம்?" என்று கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனார்!

நான் பாத்ரூமில் தள்ளப்பட்டு தண்ணீர் விட்டு கழுத்தைக் கழுவிக் கொண்டு வந்



தேன்.

அதற்குப் பிறகு நான் கலாவைப் பார்த்தது, அவள் ஹார்மோனியம் வைத்துக் கொண்டு 'ராஆர வேணு கோ ஓ பாலா' என்று பாடினது, நான் ட்யூப் லைட்டைப் பார்த்துக் கொண்டே கேசரி சாப்பிட்டது எல்லாம் சொல்ல சுவாரசியமாக எதுவும் இல்லை.

சம்பிரதாயமாக, "நாங்க போய் பிறகு உங்களுக்குத் தகவல் சொல்றோம்" என்று டாக்ஸியில் ஏறி, வெயிட்டிங் சார்ஜுக்காக நடராஜு கூட தகராறு செய்து, வீடு வந்த போதும் கூட எதுவும் நடக்கவில்லை.

ராத்திரி எல்லாம் கனவுகள். கனவில் கலா வரவே இல்லை. எல்லாம் பல்லிதான். கனவிலும் அந்த பல்லி அதே கெட்ட காரியத்தைச் செய்து என்னை இரண்டு முறை எழுப்பி விட்டது. பிறகு எப்போது தூங்கினேனோ, எப்போது சொறிந்து கொண்டேனோ தெரியாது. காலை எழுந்தால் கழுத்தில் பின்புறம் அரிப்பு. பேப்பர், காஃபி முடிப்பதற்குள் அதிகமானதால் கழுத்தை வளைத்து கண்ணாடியில் பார்க்க முயன்று, முடியாமல் இரண்டு கண்ணாடி அமைத்துக் கொண்டதில் அந்த ஸ்தலத்தில் ஒரு வட்டம் சிவப்பாக. அதில் பொறி பொறியாய் சின்ன கொப்புளங்கள்.

நான் அவ்வளவாக கவனிக்காமல் குளித்து விட்டு, தலைக்குத் தடவும் போது சிறிது எண்ணெய் தடவினேன். சின்ன வயதிலிருந்தே வீட்டில் தேங்காய் எண்ணெய், மஞ்சள் பொடி குழைத்து தேங்காய் எண்ணெய், பிரில் இங்க், மண்ணெண்ணெய் எதுவும் இல்லாவிட்டால் எச்சில் என்று கை வைத்தியம் பழக்கம்.

ஆஃபீஸ் போய் கொஞ்ச நேரம் மறந்தே போயிருந்தேன். கொஞ்ச நேரம்தான். திரும்ப அரிப்பு ஆரம்பித்தது. விரல், பேனா, ஜெம் கிளிப் எதற்கும் நிற்காமல் லஞ்சுக்கு பிறகு பொறுக்க மாட்டாது அரை நாள் லீவு சொல்லிவிட்டு நேரே டாக்டர் வீட்டுக்குப் போனேன். எங்க ஏரியா டாக்டர்தான். ரிடையர் ஆக வேண்டிய வயசு. க்ரோஸின், பெனட்ரில்க்கு மேல் பிரிஸ்கிரிப்ஷன் எழுதி நான் பார்த்ததில்லை. ஆனாலும் கை ராசின்னு பேர்.

ஸ்ரீகி

டாக்டர் மத்தியானச் சாப்பாட்டுக்கு பிறகு சிரமப்பரிகாரத்தில் இருந்தார். நான் இந்த விஷயத்துக்காக எழுப்பினது அவ்வளவாக ரசிக்கவில்லை.

''இதுக்கெல்லாம் மருந்து கிடையா தேப்பா. அப்படியெல்லாம் அரிக்காதே.''

"என்ன டாக்டர் இத்தன வருஷத்துல ஒரு பல்லி கேஸ் கூடவா வந்ததில்ல?"

"இல்லயே – நானும் முப்பது வருஷமா இந்த பஜார் ஸ்ட்ரீட்ல இருக்கேன். ஒரு பய இந்த மாதிரி வந்ததில்லையே. நீதான் காம்ப்ளிகேட் பண்ணியிருக்கணும். ராத்திரி முழுக்க சொறிஞ்சயா? எங்க கையக் காட்டு."

கிழம் ஸ்காட்லாண்டு யார்டில் நாயாக இருந்திருக்க வேண்டியது. ரெண்டே நிமிஷத் துல பாயிண்டுக்கு வந்து விட்டது. நான் தயங்கினேன். நகம் வெட்டி வெகு நாளாகி யிருந்தது. அதை வேறு பார்த்து விட்டால் நகம் வெட்டுவது, சலூனுக்குப் போவது, சோப்புத் தேய்த்துக் குளிப்பது என்று லெக்சர் ஆரம்பிக்கும்.

"எதுக்கும் ஒரு ஆயின்மெண்ட் தரேன். ரெண்டு நாள் தடவு. சொறியாதே. தானே சரியாப் போயிடும்."

சின்னதாய், மெலிசாய் ஒரு ட்யூப் கொடுத்தார். பிதுக்கினால் பசு மஞ்சளாய் செமி ஸாலிட் ஆக களிம்பு இருந்தது. மோந்து பார்த்தேன். அம்ருதாஞ்சன் மாதிரி நல்ல வாசனை இல்லை. டீஸல் ஆயில் மாதிரி வாசனை. அதைத் தடவிக் கொண்ட தில் தாற்காலிகமாக சாயங்காலம் வரை பர வாயில்லை. இரவு பாதி ட்யூபை அமுக்கித் தடவிக் கொண்டு படுத்தேன். மறுபடி எப் போது அரிக்கத் தொடங்கியதோ தெரியாது. காலையில் எழுந்தால் வட்டம் மாவட்டமாகி இருந்தது.

அம்மா ரொம்ப கவலைப்பட்டாள். கல்யாணத்துக்குப் பார்க்கும் போது இப்படி யார் கண்ணோ பட்டு விட்டதாம். பஜார் ஸ்ட்ரீட் பழைய டாக்டரை வைது விட்டு காளி ஜோஸியரிடம் போய் பரிகாரம் பார்க் கலாம் என்று யோசனை தெரிவித்தாள்.

அதற்குள் அப்பா திருவள்ளூரில் யாரோ கருட உபாசகர் இருப்பதாகவும், அவர் பாம்பு, தேள் எல்லா கடி விஷத்தையும் ஆயுர்வேத மருந்தில் சரிப்படுத்துவதாகவும் பெருமாள் கோவில் மடப்பள்ளி தளிகை நரசிம்மன் மச்சினி சொல்லக்கேட்டு வர, நேரே சபர்பன் பிடித்து திருவள்ளூர்.

அங்கே ரயில்வே ஸ்டேஷனிலேயே திரும்பப் போய்க் கொண்டிருந்த கோஷ்டி யிடம் விசாரித்தார்கள்.

"பாம்பா? தேளா? அரணையா?"

இல்லை பல்லிதான் என்று அல்பமாக சொல்ல வெட்கமாக இருந்தது.

அங்கே அக்ரஹாரத் தெருவில் வாசல் திண்ணையிலேயே, 'வைத்திய ரத்தினம், வைத்திய திலகம், கலியுக தன்வந்திரி' என்று பழைய கால போர்டு இருந்தது. நிறைய கண் ணாடி அலமாரிகளில் புட்டிகளுக்கு நடுவே நெற்றி உடம்பெல்லாம் நாமமும், மூக்கு கருடனையும், உடல் ஜாம்பவானையும் நினைவூட்ட கையில் ஒரு பழுப்புப் புத்தகத் துடன் வைத்திய திலகம் உட்கார்ந்தபடியே கிடந்த திருக்கோலத்தில் இருந்தார். பாவம், அவரை எழுப்பி மெதுவாக வந்த விஷயத் தைச் சொல்லி, அவர் என்ன புரிந்து கொண் டாரோ, "பல்லி விழுந்தால் என்ன? எங்க விழுந்தது?"

"விழல சுவாமி. என்ன ஆச்சுன்னா, நாங்க பெண் பார்க்கப் போயிருந்தோமா, அங்க ட்யூப் லைட்டுக்கு அடியில சோபா மேல...''

"அட நான் உன் உடம்புல எங்க விழுந்த துன்னு கேட்கறேன்."

"கழுத்துல பின் பக்கம்."

"இரு பஞ்சாங்கத்துல பலன் பார்த்துட லாம்."

அவர் பஞ்சாங்கத்தைப் பிரித்து, "என்ன சொன்ன – பின் கழுத்தா?

காணமே – முகவாய்க்கட்டை ராஜ தண் டனை, வாயில் பயம், வலது புஜம் சத்ரு நாசம், இடது புஜம் ஸ்த்ரீ... இல்லையே? எதுக்கும் பாம்பு பஞ்சாங்கத்துல இருக் கான்னு பார்த்துடலாம். டீ அந்த பாம்பு பஞ் சாங்கத்தைக் கொண்டு வா...."

அவரிடம் மறுபடியும் விழுந்தது பல்லி இல்லை என்றும், விழுந்தது என்ன என்றும் ஏதோ ரகசிய வியாதிக்காரன் மாதிரி சன்ன மான குரலில் சொல்லி முடித்தேன்.

"அட ராமா! அத மொதல்லயே சரியா சொல்லக் கூடாதா? எங்க காட்டு பார்க்க லாம். ஒரு வேளை அந்த பல்லி கர்ப்பமோ?"

"தெரியலயே எதுக்கும் விசாரிச்சுடலாம்" இது அம்மா.

"இல்ல சார், ராத்திரியில கொஞ்சம் நகம் பட்டிருக்கலாம்."

"அட கஷ்டமே! மொதல்லயே சரியா சொல்லக் கூடாதா? நகமே விஷம்தான். இதுல பல்லி வேற சேர்ந்துருக்கா, இரு தன் வந்திரி என்ன சொல்லியிருக்கார்ன்னு பார்க்

கலாம்." அலமாரியிலிருந்து உதிர்ந்து போகும் போல இருந்த ஒரு புத்தகத்தை எடுத்தார். ஐந்து நிமிடத்துக்குப் பிறகு திருப்தியாக எதுவும் அகப்படாமல் கண்ணை மூடி ஏதோ முணுமுணுத்தார்.

கடைசியில் "அம்ருத வல்லி"தான் என்றார்.

"யாரது மாருத நாட்டு இளவரசியா?" என்று அடக்க முடியாமல் கேட்டே விட்டேன். எனக்கு இன்னும் அம்புலிமாமா படிக்கும் வழக்கம் உண்டு.

"சிச்சி! அம்ருதக் கொடிப்பா அது. சர்வ ரோக நிவாரணி. கிடைக்கறதுதான் கஷ்டம். இதோ சொல்லியிருக்கு பாரு. வடக்கு பார்த்து வளர்ற கொடியா இருக்கணும். சுக்ர வாரம் சந்த்யா வேளையில் குளிச்சுட்டு, மூணு துளிர் இலையா சாப்பிட்டா எல்லா விஷமும் போயிடும்."

நாங்கள் மௌனமாக அவரையே கவனித்துக் கொண்டிருந்தோம்.

"தவிர பத்தியம் இருக்கணும். உப்பு, புளி, காரம், தித்திப்பு சேர்க்கக் கூடாது."

அப்ப போறபோது சாப்பாட்டுக்கு ரெண்டு கிலோ நல்ல கொட்டைப் பாக்கு வாங்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு, அவரிடம் கேட்க நினைத்தது. 'கொடியிலிருந்து பறித்துத் தின்ன வேண்டுமா இல்லை கை படாமல் தெற்குப் பார்த்து மண்டி போட்டு குனிந்து ஆடு மாடு போல தின்ன வேண்டுமா' என்பதே.

கேட்கத்துணிவில்லை. ஆமாம் என்று சொல்லிவிட்டால்?

அம்ருதவல்லி சஞ்சீவி பர்வதத்தில் இருந்த மூலிகையாம். அதற்கு பத்ரிநாத்துக்கோ, ராமேஸ்வரத்துக்கோ போய்த்தான் தேட வேண்டுமாம். வைத்திய ரத்தினத்துக்கு தக்ஷிணை வைத்துவிட்டு வீடு திரும்பினோம்.

பெண் பார்த்து விட்டு மூன்று நாளாகியும் ரிஸல்ட் தெரியாத மாமனார் ஃபோன் செய்தார்.

முதலில் அப்பா பல்லி விஷயம்தான் சொன்னார்.

"அப்படியா ஆச்சரியமா இருக்கே! அது வாழும் பல்லின்னா."

வாழாவெட்டிப் பல்லின்னு வேற உண்டா என்ன?

"சேச்சே! அப்படியெல்லாம் பண்ணியிருக்காதே!" என்றார்.

ஏதோ 'எங்க பப்லு அப்படியெல்லாம் பண்ண மாட்டானே' என்று பேரனைப் பற்றி சொல்வது போல. அவரே வேறு உபாயம் சொன்னார்.

"எதுக்கு கல்யாணத்துக்கு முன்ன ஒரு தரம் காஞ்சிவரம் போயி, அங்க வரதராஜப் பெருமாள் கோவில்ல கூரைல ரெண்டு பெரிய பல்லி இருக்கும். அதைத் தொட்டால் எல்லா தோஷமும் போயிடும்."

நான் டெலிஃபோன் வயரை வெட்ட கோடரி ஏதாவது கிடைக்குமா என்று தேடினேன். பிறகு ரொம்ப நாளைக்கு அலோபதி, ஹோமியோபதி, நேச்சுரோபதி, வெங்கடாசலபதி என்று எத்தனையோ வைத்தியம் பார்த்து, எதற்கும் சரியாகாமல் புறா ரத்தம், முருங்க மரத்துக் கோந்து, கடாப் பெருங்காயம், சம்பா கோதுமைத் தவிடு என்று ஒரு வருஷம் பைத்தியம் பிடித்து அலைந்தேன். இதற்கு நடுவில் கலாவைக் கல்யாணம் செய்து கொண்டதை விட, திடீரென்று ஒரு நாள் அரிப்பு நின்று போய், அரிப்பை வென்றதால் ஆபீஸில் 'அரிஞ்சய சோழன்' என்று பட்டம் சூட்டிக் கொண்டது சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவம்.

இந்தக் கதை எங்கள் குடும்பத்தில் பிரபலமாகி, குழந்தைகள் கார்டூன் ஷோ, படக்கதை, சக்திமான் எல்லாம் போரடித்தால் சாப்பிட வைக்க பல்லி மாமா கதை சொல்லு என்று கேட்கும் அளவுக்கு ஆகிவிட்டது. மேலும் குழந்தைகளுக்கு கை நகம் வெட்டுவது, புண்களை சொரியக் கூடாது போன்ற நல்ல விஷயங்களை போதிக்க நீதிக்கதை ஆனது. இப்பக் கூட எங்காவது உறவினர் வீட்டுக்கோ கல்யாணத்துக்கோ புகுந்த வீட்டுக்கோ போனால், எல்லோரும் சன்னக் குரலில் என்னைத் திரும்பிப் பார்த்துப் பேசிக் கொள்வார்கள்.

என்ன இருந்தாலும் அதிலும் ஒரு அல்ப சந்தோஷம்தான் இல்லையா?



**"என் காதலி 'அதெல்லாம் கல்யாணத்துக்கு அப்புறம்தான்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்."**

**"நீ அப்படி என்ன கேட்டாய்?"**

**"ஒரு பத்து ரூபாய் கை மாத்து!"**

**– எஸ். மோகன்**

# 'ஜெ' ரசிகர் மன்றத் தலைவர்...?

● கலை அரசு, கோவை – 42. ❑

*? விஷ சாராயம் குடித்துப் பிழைத்துக் கொண்ட ஒரு பெண்மணி, 'எனக்குக் கொஞ்ச நாளா நெஞ்சுவலி. சாராயம் குடிச்சா சரியாப் போய்விடும்னு சொன்னாங்க. அதான் குடிச்சேன்' என்று சொல்வதை டீ.வி.யில் காட்டினார்களே... இது சாராயத்துக்கு விளம்பரமா?*

! இல்லை! பெண்களின் அறியாமைக்கு விளம்பரம்! அவர்களை அப்படி வைத்திருக்கும் பொறுப்பற்ற அரசியல், சமுதாய சக்திகளின் அலட்சியத்துக்கு விளம்பரம்!

● ப. சுகுமார், தூத்துக்குடி – 1.

*? 'இம்பீச்மெண்ட்'டிலிருந்து கிளிண்டன் விடுவிக்கப்பட்டு விட்டாரே?*

! கட்சிக் கட்டுப்பாடுகளை மீறித்தான் அவருக்கு வோட்டு விழுந்திருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும். இன்னும் பதினேழு வாக்குகள் கண்டனத் தீர்மானத்துக்கு ஆதரவாக விழுந்திருக்குமானால் கிளிண்டன் அம்பேர! எனவே, விடுவிக்கப்பட்டார் என்பதை விட தப்பிப் பிழைத்தார் என்று சொல்லலாம்!

● கே. வி. சூர்யா, நல்லத்துக்குடி.

*? தற்போது வரும் சினிமாக்கள் ஆரோக்கியமாக உள்ளனவா?*

! ஆம்! ஸ்ட்ரெச்சரிலிருந்து வீல் சேருக்கு வந்திருக்கின்றன!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

*? தனிக்கோர்ட்டு விஷயத்தில் தமிழக அரசு தோற்று விட்டதா?*

! இல்லையே. 'மத்திய அரசின் ஆணை செல்லாது' என உச்சநீதி மன்றத்தில் வழக்காடுகிறதே. உச்சநீதி மன்றத்தின் நியாய உணர்வில் நம்பிக்கை வைப்போம்.

● கே. ஆர். உதயகுமார், சென்னை – 1.

*? இந்திய ராணுவத் தளபதியாயிருந்த கே. சுந்தர்ஜியின் மறைவு பற்றி...?*

! பதவியில் இருந்த போதும் பொறுப்புடன் செயல்பட்டார்; பின்னர் போஃபர்ஸ் ஊழல் குறித்து துணிவுடன் வெளியிட்டார். அனுபவம் கைகொடுத்தது; சிந்தனையாளராக விளங்கியது சிறப்பளித்தது.

● யமுனா ரெங்கநாதன், மடிப்பாக்கம்.

*? கலைஞரின் 'குங்குமப் பொட்டு' விவகாரம் பற்றி 'காலத்துக்கு ஒவ்வாதது எனினும் அர்த்தமுள்ளது' என்று பதிலளித்திருக்கிறீர்களே...? 'அர்த்தமுள்ளது' என்றால் எந்த அர்த்தத்தில்...?*

! பெரியார் வழி வந்தவர்களுக்கு மட்டுமே சொல்லப்பட்ட பொருத்தமான அறிவுரை என்பதால்.

● ச. தங்கமணி, சத்திரப்பட்டி.

*? வாக்காளரிடம் மாதம் ஒரு ரூபாய் வசூல் செய்து, அதில் வரும் பணத்தைக் கொண்டு தேர்தல் செலவு செய்து கொள்ளலாம் என்ற த.மா.கா வின் யோசனை குறித்து?*

! நல்ல யோசனைதான். 'தேர்தல் செலவுகளை அரசாங்கமே ஏற்கவேண்டும்; அப்படி ஏற்றால், தேர்தலுக்காக செலவழிக்க நேர்கிறதே என்று லஞ்ச – ஊழல்களில் இறங்குவது குறையும்' – இந்த அடிப்படைக் கருத்து பல காலமாகச் சொல்லி வரப்பட்டுள்ளது. முதன் முதலாகத் த.மா.கா. தலைவர்தான் இதை ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்பதன் அடையாளம் அவருடைய இந்த யோசனை. அனைத்துக் கட்சித் தலைவர்களும் கூடி, மேலும் சிந்தித்து, வழிமுறைகள், விதிமுறைகள் உருவாக்கிச் செயல்படுவது நாட்டுக்கு நல்லது. வாக்காளருக்கும் பொறுப்பு வரும்!

● கற்பகம் ரவி நாகராஜன், தேனி.

*? சின்ன எம்.ஜி.ஆர். என்று வி.என். சுதாகரன் தம்மைத் தாமே கூறிக் கொள்கிறாரே...? எதைக் காட்டுகிறது?*

! சின்னத்தனத்தைத்தான்!

● எம். எம். ஆனந்தன், வந்தவாசி.

*? பல கவிஞர்கள் போதை மருந்தைப் பயன்படுத்தினராமே! போதையில்தான் புலமை அதிகம் வெளிப்படுமா சார்?*

! "போதையில் எழுத்து வரும் என்பது பொய். நான் போதையில் இருந்தபோது எழுத

• பொறுப்பும் சிறப்பும்



• உடைந்த உண்மை!



• தலைக்கு வந்தது...!





நினைவிருக்கப் போகிறது என்கிற தைரியம் டாக்டருக்கு. வைகோ இன்னும் அந்த அளவுக்குத் தைரியம் பெறவில்லை போலிருக்கிறது.

● வைகை வளவன், மதுரை - 17.

*? உலகப் புகழ் பெற்ற பின்னணிப் பாடகர் லதா மங்கேஷ்கரின் பெயரால் வழங்கப்படும் விருதைப் பெறுகிற அளவுக்குத் தகுதிகள் இளையராஜாவுக்கு இருக்கிறதா ஸ்வாமி...?*

! அதற்கு மேலும் இருக்கிறது.

● டி. சந்திரன், சித்தோடு.

*? புது டெல்லி ஜெ ரசிகர் மன்றத் தலைவர் வாஜ்பாயா இல்லை ஹலோ சொல்ல வந்தவரா?*

! தலைவர் பதவியை விட்டுக் கொடுக்க வாஜ்பாய்க்கு மனம் வராது. ஹலோ சொன்னவர் செயலாளர்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

*? தமிழகத்தில் ஜாதி மோதல்களைத் தடுக்க அனைவரும் காதல் கலப்புத் திருமணத்தை ஆதரிக்க வேண்டும் என்று முதல்வர் கருணாநிதி யோசனை பற்றி...?*

! உண்மைதான். இன்றைய தினம் ஜாதியைப் புதுப்பிக்கிற அம்சங்கள் இரண்டு. ஒன்று : திருமணங்கள்; இரண்டு : இட ஒதுக்கீடு. இவற்றுள் ஒன்றாவது மறையட்டுமே!

● பெ. பொன்ராஜபாண்டி, மதுரை - 10.

*? சமஸ்கிருதம் ஒரு செத்த மொழி என்று கி. வீரமணி கூறுகிறாரே?*

! அல்ல; சத்து மொழி!

● ச. அருட்செல்வன், ஹலோல் (குஜராத்).

*? ஹிமாசல பிரதேசத்தில் சில வகை பாலிதீன் பைகளுக்குத் தடைவிதித்திருப்பது போல் மற்ற மாநிலங்களும் தடை விதிக்குமா?*

! மேற்கு வங்கம் தடைவிதித்து விட்டது. தமிழகத்திலும் தடை வரப் போவதாகச் செய்தி பார்த்தேன். சுற்றுச் சூழல் பாதுகாப்புக்கான சரியான நடவடிக்கை. அப்படியொன்றும் இன்றியமையாத பொருள் அல்ல பாலிதீன் பை!

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு.

*? சமீபத்தில் உங்களைக் கவர்ந்த சிறுகதை....?*

! இந்தியா டுடே இதழில் ஆர். சூடாமணி எழுதிய 'குப்பம்மாவின் பெண்கள்'. இழையோடும் நகைச்சுவை, புன்னகை மாறாமல் படிக்க வைத்தது. அதே சமயம் கதையில்தான் எத்தனை ஆழம்!

● ஸ்ரீவி நாயகன், ஸ்ரீவில்லிபுத்தூர்.

*? வைரமுத்துவுக்குக் காதலைப் பற்றி என்ன தெரியும் என்று பட்டிமன்ற நடுவர் ஐ. லியோனி கூறியதைப் பற்றி...?*

! 'விழியில் விழுந்து, இதயம் நுழைந்து உயிரில் கலந்த உறவே', 'அந்தி மழை பொழிகிறது, ஒவ்வொரு துளியிலும் உன்முகம் தெரிகிறது' போன்ற பாடல்களை லியோனி கேட்காமலிருக்க வாய்ப்பில்லை. லியோனி ஒப்புக் கொள்ளாவிட்டால் போகிறார் (தமாஷுக்குக் கூட அவர் பேசியிருக்கலாம்). நமக்குத் தெரியும் வைரமுத்துவுக்கு என்ன தெரியும் என்பது!...



• தெரிந்ததும்....

• தெரியாததும்!

முடிந்தது மிக மிகச் சொற்பம்!" - சொன்னவர் கண்ணதாசன்.

● ராஜி, கமுதி.

*? நீதிமன்ற மாற்றங்களை ராமதாஸ் ஆதரிக்கிறார். வைகோ கடுமையாக எதிர்க்கிறார் - இதென்ன இப்படி ஒரு கூட்டணி!*

! ஊழல் செய்பவர்களைக் கட்டி வைத்துச் சவுக்கால் அடிக்க வேண்டும் என்று முன்பு தாம் பேசியதெல்லாம் இப்போது யாருக்கு

• முதல் வோட்டு!



❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கலை அரசு,
'அருண் இல்லம்' 2, லட்சுமி நகர்,
கோவைப்புதூர், கோவை - 641 042.

# பக்தவத்சலத்தின் நாற்காலி!



பக்தவத்சலம் சாலை (வாரன் ரோடு)யில் உள்ள சரோஜினி வரதப்பனின் வீட்டு வரவேற்பறை. சோபாக்களை அடுத்து, டெலிபோனுக்குப் பக்கத்தில் ஒரு நாற்காலி. கை வைத்துக் கொள்ள சௌகரியமான, பிரம்பு பின்னிய நாற்காலி. பழைய காலத்து, 'ரோஸ் வுட்' தயாரிப்பு. டார்க் பிரவுன் நிறத்தில் குஷன். முன்னாள் தமிழக முதல்வர் பக்தவத்சலம் பயன்படுத்திய இந்த நாற்காலிக்கு வயது எண்பது.

"இந்த நாற்காலியின் மீது அப்பாவுக்கு ரொம்ப அட்டாச்மென்ட். காரணம், அப்பாவின் திருமணத்தின் போது, அம்மா வீட்டிலிருந்து வந்த சீதனங்களுள் இந்த நாற்காலி முக்கியமானது. இந்த நாற்காலியுடன் கூட வந்த மற்ற மர ஐட்டங்களில் ஒரு மேஜை, ஒரு ஈசி சேர், அதற்குப் பக்கத்திலேயே பத்திரிகைகள் போன்றவற்றை வைப்பதற்கு வசதியாய் சின்ன சைஸ் ரோஸ்வுட் பெஞ்ச், கட்டில் இவையெல்லாம் அடக்கம்.

"இவையெல்லாமே அந்தக் காலத்தில் மிகப் பிரபல ஃபர்னிச்சர் கடையான 'கர்சன் அண்டு கம்பெனி' தயாரிப்பு" என்கிறார் பக்தவத்சலத்தின் மகளான சரோஜினி வரதப்பன்.

"படுக்கை அறையில்தான் அப்பா இந்த நாற்காலியைப் போட்டு வைத்திருப்பார். அதற்கு முன்னால் ஒரு மேஜை. தினமும் காலையில் எழுந்தவுடன், இந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டு, ஸ்ரீராம ஜெயம் எழுதுவது அவருடைய வழக்கம். அதன்பின் நியூஸ் பேப்பர் படிப்பார்.

"மாலை நேரங்களில், ஈசி சேரை வராந்தாவில் போட்டுக் கொண்டு காற்றாட, வருகிறவர்களுடன் பேசிக் கொண்டிருப்பார். இந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு பல உத்தரவுகளைப் போட்டிருக்கிறார்.

"எங்களுடைய இளம் வயதில், அப்பாவிடம் எங்களுக்கெல்லாம் கொஞ்சம் பயம். எனவே ரொம்ப நெருங்கியதில்லை. அதனால், அவருடைய நாற்காலியில் நாங்கள் யாரும் உட்கார்ந்ததில்லை. பெரியவர்களான பின், அப்பாவிடம் கொண்ட மரியாதை காரணமாக அதில் அமர்ந்ததில்லை.

"இந்த நாற்காலியில், அப்பா உட்கார்ந்திருக்கிறபோது, பயமில்லாமல் ஜெயந்தி நடராஜனின் மகன் பத்ரி, தாத்தா மடியில் உட்கார்ந்து கொள்ளுவான். அவர் இல்லாதபோது நாற்காலியிலும் உட்கார்ந்து கொள்ளுவான்!

"அப்பாவின் மறைவுக்குப் பின் சென்டிமென்ட்டல் அடாச்மெண்ட் காரணமாக அவர் பயன்படுத்திய நாற்காலி, மேஜை, மூக்குக் கண்ணாடி, ஆஸ்துமா தொல்லையைச் சமாளிக்க அவர் உபயோகித்த இன்ஹேலர் எல்லாவற்றையும் பாதுகாத்து வருகிறேன்.

"இந்த நாற்காலியை அப்பா இல்லாமல் வெறுமையாய்ப் பார்க்கிறபோது பழைய நினைவுகள் என் மனத்தில் நிழலாடுகின்றன. இப்போது பத்ரி வளர்ந்து விட்டான். அதனால் இந்த நாற்காலியில் அவன் கூட உட்காருவதில்லை!"

சந்திப்பு : **மௌலி**
படம் : **ஸ்ரீஹரி**

**உங்கள் மருத்துவச் செலவை மிச்சப்படுத்தவே**




மருத்துவ மாத இதழ்

விலை
ரூ. 8.00

சித்தா, ஆயுர்வேதா, அலோபதி, ஹோமியோபதி, அகுபங்சர், யுனானி மருத்துவ முறைகளைப் பற்றிய விளக்கங்கள், ஸ்பெஷலிஸ்டுகளின் பேட்டிகளுடன்...

விற்பனையாகும் மார்ச் இதழில்...

டாக்டர் **நாராயண ரெட்டி** அவர்களின் சிறப்புப் பேட்டி

இது புத்தக வடிவில் ஒரு நர்ஸிங் ஹோம்!

**மங்கையர்கள் விரும்பும் மகத்தான நாவல்**

# மங்கையர் நாவல்

**சுபா + வித்யா சுப்ரமணியம்**

## 2 முழு நாவல்கள்

பெண்மணிகள் விரும்பும் கண்மணி அளவில்.... 5 ரூபாய் விலையில்!

**விவேக் பப்ளிகேஷன்ஸ்**
286/2, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை – 600 005.
போன்: 8572163, 8570773

---




**ESTD.1955** ஸ்ரீ **Ph: 0431-706823, 704312 - Fax:701515**

## 1999.ஆம் வருடத்தில் எமது வடதேச யாத்திரைகள்

**1-5-99**ம் தேதி சென்னையிலிருந்து 3டயர் ஸ்லீப்பர் கோச் புறப்பட்டு பூரி, புவனேஷ்வர், கோனார்க், கல்கத்தா, கயா, காசி, நேபாள், அயோத்தி, அலகாபாத், அரித்வார், கேதார் - பத்ரிநாத், ரிஷிகேஷ், டில்லி, ஆக்ரா, மதுரா, விஜயவாடா வழியாக சென்னைக்கு அதே கோச் திரும்பிவருகிறது. ரயில் கட்டணம், பெர்த் கட்டணம், காலை டிபன், காபி, 2 வேளை போஜனம் உள்பட ரூ. **9976/** (நாட்கள் 27). பத்ரி-கேதார், நேபாள் பஸ் சார்ஜ் ரூ. **4260/** தனி. வராதவர் செலுத்தவேண்டியதில்லை. இந்த யாத்திரையில், மலேஷியா, அடையார், பாலவாக்கம், கும்பகோணம், வேம்பநாதம், சேலம், சென்னை, திருப்பூர், பெரம்பலூர், திருவையாறு, அரியலூர், திருச்சி முதலிய ஊர்களில் இருந்து பல அன்பர்கள் சேர்ந்துள்ளார்கள்.

**2-5-99**ம் தேதி 16 நாட்கள் கொண்ட யாத்திரைக்கு ஒரு தனி கோச் சென்னையிலிருந்து புறப்பட்டு பூரி, புவனேஷ்வர், கோனார்க், கல்கத்தா, கயா, அலகாபாத், காசி, சென்னை. 2 வேளை போஜனம், காபி, டிபன் உள்பட நபருக்கு கட்டணம் ரூ. **5750/-**

**5-4-99**ம் தேதி சென்னையிலிருந்து தனி 3டயர் கோச் புறப்பட்டு, அலகாபாத், அயோத்தியா, காசி, நேபாள் (காட் மாண்ட்) கயா, அரித்வார், ரிஷிகேஷ், ஆக்ரா, மதுரா, டில்லி, சென்னை வந்து சேர்கிறது. காலை காபி, டிபன் 2 வேளை போஜனம் உள்பட நபருக்கு ரூ. **7676/-**, நேபாள் சார்ஜ் ரூ. **2260/-** தனி.

**6-6-99**ம் தேதி சென்னையிலிருந்து தனி 3டயர் கோச் ஜம்முதாவி எக்ஸ்பிரஸ் மூலம் புறப்பட்டு ஆக்ரா, மதுரா, டில்லி, அரித்வார், அமிர்தசரஸ், பத்தான் கோட், சக்திபீடங்கள், ஜ்வாலாமுகி **அமிர்தசரஸ் தங்ககோவில் வைஷ்ணவ தேவி தரிசனம்** ரயில் கட்டணம் முழுபர்த்வசதி, டிபன், காபி, போஜன வசதி உள்பட நபருக்கு ரூ. **6976/-**

**16 நாட்கள் கொண்ட பம்பாய் உள்ளிட்ட பஞ்சதுவாரகை யாத்திரை**

அகமதாபாத், கோமதி துவாரகை, பேட் துவாரகை, பாங்கர் துவாரகை, நாத துவாரகை, காங்ரோலி துவாரகை, சோமநாத், வீரபூர், போர்பந்தர், உதயபூர், புஷ்கரம், அஜ்மீர், ஜெய்பூர், மவுண்ட் அபு அம்பாஜி கூடிய யாத்திரைக்கு ரூ. 5675/-. இதற்கு 4 மாதங்களுக்கு முன்பாகவே பதிவு செய்து கொள்ளவேண்டும்.

அனைத்து யாத்திரைகளுக்கும் ரூ. 2500 வீதம் அட்வான்ஸ் செலுத்தி பதிவு செய்து கொள்ள வேண்டும்.

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ் (Regd.)**
34 A/2, அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.
உரிமையாளர்: K.E. நம்பிள்ளை, ஆர்கனைசர்: N.K. சேகர்.

விபரத்திற்கு 3ரூ ஸ்டாம்ப் அனுப்பவேண்டும்



# “உங்களிடம் நாங்கள் எதிர்பார்ப்பதெல்லாம் என்றும் மாறா அன்பு”



அன்பே வாழ்வின் அடிப்படை. கணவன் மனைவி ஒருவருக்கொருவர் செலுத்தும் அன்பும் கொண்டுள்ள நம்பிக்கையும் என்றென்றும் மாறுவதில்லை.

நீங்களும் அப்படியே என்றும் மாறா அன்பை எங்களுக்கு கொடுக்க வேண்டும்; உங்களை நம்பியுள்ள எங்களுக்கு மாறு செய்யக்கூடாது.

சபலம் வரும்போது எங்களின் அன்பு, பாசம், நம்பிக்கை இவற்றை நினைத்துக் கொள்ளுங்கள். அதுவே நல்வாழ்விற்கு வழிவகுக்கும்; வழி தவறினால் மிஞ்சுவது சோகமே!

*மனைவி தரும் சுகங்கள் இருக்க*
*தகாத உறவுகள் எதற்கு?*




## தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு சங்கம்

417, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை 600 008.
தொலைபேசி: 825 5467, 825 5261, 825 4917.
24 மணி நேர ஹாட்லைன்: 825 6882, 825 6864.

# அவர் வந்தார்; தந்தார்; சென்றார்!

# அவர் வென்றார்!

**சிலரது வாழ்க்கையில் சினிமாத்தனமான திருப்பங்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இதற்கு உதாரணம் தொழிலதிபர் பலராமின் வாழ்க்கை...**

தொலைக்காட்சிப் பெட்டிகள் தயாரிப்பு, நட்சத்திர ஹோட்டல்கள், டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸ் என்று தமது இருபத்தியேழாவது வயதிலேயே பல தொழில்களை வெற்றியுடன் நடத்தியவர் திருச்சூரைச் சேர்ந்த தொழிலதிபரான பலராம். தீவிர குருவாயூரப்பன் பக்தர். திருச்சூரில் இருந்தால் தினசரி கோயிலுக்குப் போகாமல் இருக்க மாட்டார். பிராகாரத்தில் கண்ணை மூடிக் கொண்டு அரைமணி நேரம் குருவாயூரப்பனை தியானித்து



வருவது அவரது வழிபாட்டு முறை.

அன்றும் அப்படித்தான். தியானித்து விட்டு கண்ணைத் திறந்தவர் எதிரே காவி வேட்டியும் முடிந்த குடுமியுமாக ஒரு வயதான பெரியவர். தோளில் ஜோல்னா பை. வயது நிச்சயம் 80க்கு மேல். முன்பின் அறிமுகமாகாதவர்.

"நீதான் அதற்குச் சரியான ஆள்!" என்றார் பெரியவர்.

ஒரு நிமிடம் பலராமுக்கு ஒன்றும் புரியவில்லை. என்ன சொல்கிறார்?

தொடர்ந்தார் அவர்.

"நீ தான் பொருத்தமான ஆள்" என்றவர், "என்னிடம் பல்வேறு வியாதிகளைக் குணப்படுத்தும் ஆயுர்வேத வைத்தியமுறைகளை விவரிக்கும் நூற்றுக் கணக்கான ஓலைச் சுவடிகள் இருக்கின்றன. கிட்டத்தட்ட ஆயிரம் ஆண்டு பழைமையானவை. எல்லாம் சமஸ்கிருதத்தில் உள்ளன. மனித

குலத்துக்குப் பயன்படாமல் அவை என்னிடம் முடங்கிப் கிடப்பது கொஞ்சமும் சரியல்ல!'' என்று கூறி நிறுத்தினார் பெரியவர்.

இதையெல்லாம் பெரியவர் தம்மிடம் ஏன் சொல்கிறார் என்று பலராமுக்குப் புரியவில்லை.

"உன் அப்பா சர்க்கரை வியாதியால் தானே இறந்தார்?'' என்றார் பெரியவர். ஷாக்காகிப் போனார் பலராம். அது இவருக்கு எப்படித் தெரியும்?

''நமது நாட்டில் ஆதிகாலந்தொட்டு மூலிகை மருத்துவம் வெற்றிகரமாகக் கையாளப்பட்டு வருவது உனக்குத் தெரிந்திருக்கும். உன் மற்ற தொழில்களைப் போலல்லாமல் இதை ஒரு சேவையாகக் கருதி, பல வியாதிகளுக்கு ஆயுர்வேத வைத்தியத்தில் சொல்லப்பட்டுள்ள மருத்துவ மூலிகைகளை மக்களிடம் கொண்டு செல்ல வேண்டும்!'' என்றவர், பையில் கைவிட்டு பெரிய பொட்டலத்தை எடுத்தார்.

''இதிலுள்ள மூலிகைப் பொடியை சர்க்கரை நோயாளிக்குக் கொடுத்து வா. முப்பத்தைந்தாவது நாள் பலன் தெரியும். அதற்கப்புறம் நாம் பேசலாம்" என்று அந்தப் பொட்டலத்தை பலராமின் கையில் திணித்தார்.

"நீங்க எங்க இருக்கீங்க.. முகவரி?'' என்ற பலராமின் கேள்விகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் கூட்டத்தில் மறைந்து விட்டார்.

**1988**ல் நடந்த அந்தச் சம்பவத்தை இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னரும் அதே ஆச்சர்யத்துடன் நம்மிடம் விவரித்தார் பலராம். தொடர்ந்து என்ன செய்தார் பலராம்.

''அந்தப் பெரியவர் சொன்னதைக் கேட்டு நடக்க வேண்டும் என்று என் உள்ளுணர்வு சொன்னது. பெரியவர் கொடுத்த மூலிகைப் பொடியை ஒரு சர்க்கரை நோயாளிக்குக் கொடுத்து சாப்பிடச் சொன்னேன். முப்பத்தைந்தாவது நாளில் அந்த நோயாளியின் ரத்தத்தைச் சோதித்துப் பார்த்ததில் சர்க்கரையின் அளவு பெருமளவு குறைந்திருப்பது தெரிந்தது. அடுத்த நாள் பெரியவர் தொலைபேசியில் வந்தார். "ஹைதராபாத்திலிருந்து பேசுகிறேன்!" என்றவர், "என்ன நல்ல பயன் இருந்ததா?" என்று எடுத்த எடுப்பில் கேட்டார். "நல்ல ரிசல்ட்" தான் என்று நான் உற்சாகத்துடன் சொன்னேன். அதன் பின் ஒரு வாரம் கழித்து குருவாயூரப்பன் கோயிலில் என்னைச் சந்தித்து நூற்றுக் கணக்கான ஓலைச் சுவடிகளைக் கொடுத்து விட்டு கண்ணீர் வழிய விடை பெற்றுப் போனார்.

கிட்டத்தட்ட மூன்று வருட காலம் ஓலைச் சுவடிகளுடன் போராடி மூன்றில் ஒரு பகுதியை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தேன். அதன் பின், ஓலைச் சுவடியில் உள்ளபடி கடுக்காய், மஞ்சள், நெல்லி என்று ஒன்பது வகையான மூலிகைகளைக் கொண்டு சர்க்கரை வியாதிக்கான மாத்திரைத் தயாரிப்பில் இறங்கினேன். கிட்டத்தட்ட 90 லட்சம் ரூபாய் செலவு செய்தேன். என் முயற்சியின் விளைவாக இந்திய மருத்துவக் கழகம், நான் தயாரித்த மாத்திரை ரத்தத்தில் சர்க்கரையின் அளவை குறைக்கும் என்பதையும் இன்சுலினை சுரக்கும் கணையத்தை செயல்திறன் கொண்டதாக மாற்றும் என்றும் ஏற்றுக் கொண்டது. அமெரிக்காவில் உள்ள பிரசித்தி பெற்ற மயோ கிளினிக்கும் மாத்திரைக்கு ஓ.கே. சொன்னது. இன்று இந்தியாவில் உள்ள பத்து லட்சம் சர்க்கரை நோயாளிகள் எங்கள் தயாரிப்பைச் சாப்பிட்டு வருகிறார்கள். இந்த எண்ணிக்கை தினசரி ஏறிக் கொண்டே இருக்கிறது. நமது நாட்டில் பத்தில் ஒருவருக்கு சர்க்கரை வியாதி இருக்கிறதே!'' என்று சொல்லி முடித்தார் பலராம்.

"அப்புறம் அந்தப் பெரியவர் என்ன ஆனார்?"

"மாத்திரை வெற்றிகரமாக மக்களிடம் அறிமுகமான பிறகு கடந்த வருடம் ஜூன் மாதம் இது பற்றி 'வீக்' பத்திரிகை பிரமாதமாக கவர் ஸ்டோரி ஒன்று வெளியிட்டது. அதன் பின் சில நாட்கள் கழித்து, "நான் குருஜி.. ஹரித்துவாரில் இருந்து பேசுகிறேன்!" என்று தொலைபேசியில் வந்தார் பெரியவர். "எனக்கு இப்போதுதான் சந்தோஷமாக இருக்கிறது. இனிமேல் நான் நிம்மதியாக இறந்து விடுவேன்'' என்ற பெரியவரிடம் "குருஜி... உங்களை நான் சந்தித்தே தீர வேண்டும்!" என்று குரல் நெகிழக் கேட்டுக் கொண்டேன்.

''நீ என்ன செய்யறேன்னு தூரத்தில் இருந்து பார்த்துக் கொண்டே இருப்பேன். நீ என்னைத் தேட வேண்டாம்'' என்று தொடர்பைத் துண்டித்தார் பெரியவர்.

இப்போது பெரியவருக்கு வயது 90க்கு மேல் இருக்கும். என் உள்மனது ஒவ்வொரு நிமிடமும் அவரது நினைவில்தான் இயங்குகிறது. ●

— ஸ்ரீநிவாசன்

# குறையொன்றுமில்லை

வசிஷ்டர் இருக்கிறாரே, அவர் இக்ஷ்வாகு வம்சத்துக்குப் புரோகிதர். 'இதை நீ பண்ணு, இதை நீ பண்ணு' என்று முன்னாலேயே எடுத்துச் சொல்லுவார். 'இதனால் உனக்கு க்ஷேமம் ஏற்படும்' என்று சொல்லுவார்.

இவ்வாறு சொல்லவில்லையானால் புரோஹிதருக்குப் பாபம் வந்துவிடும். சாஸ்திரம் சொல்கிறது; மனு ஸ்ம்ருதியே சொல்கிறது இதை.

ஜனங்கள் எல்லாம் பண்ணுகிற பாபம் எங்கே போகிறது என்றால், அந்த ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணுகிற ராஜாவுக்குப் போய்விடுமாம். ராஜா பண்ணுகிற பாபம் யாருக்குப் போகும்?

ராஜா பண்ணுகிற பாபம் புரோஹிதர்களுக்குப் போய்ச் சேரும்!

அப்படியானால் புரோஹிதர்களெல்லாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!

புரோஹிதர்கள் சமயத்திலே எடுத்துச் சொல்லவில்லையானால், ராஜா தர்மத்தைப் பண்ணவில்லையானால், ராஜ்யத்தில் அநீதி ஏற்பட்டுப் போகிறது. அநீதி ஏற்பட்டுப் போவதால் ஜனங்கள் பாபம் பண்ணுகிறார்கள்; பாபம் ராஜாவைச் சேர்கிறது. ராஜா பண்ணுகிற பாபம் புரோஹிதர்களைப் போய் அடைகிறது!

அதனால்தான் அக்னிக்குப் புரோஹிதன் என்று பெயர். அக்னி தப்பே பண்ணமாட்டான். அவனோடு தொடர்பு இருந்துகொண்டே இருக்க வேண்டும் நமக்கு.

மேல் வருகிற காலத்தில் இவ்வாறு ஹிதத்தைக் கொடுக்கக் கூடியவன் புரோஹிதன். மீதி தேவதைகளையெல்லாம் நம்மால் கண்ணால் பார்க்க முடியாது. அக்னியை பிரத்யக்ஷமாக நாம் பார்க்கலாம்.

அக்னி மண்டலத்திலே இந்திரன் வந்து ஹவிஸை வாங்கிக் கொள்கிறான். 'இந்திரனை நீ பார்த்தாயா?' என்றால், இல்லை! கண்ணுக்குத் தெரியாமல் வருகிறான். ஆனால் அக்னி பிரத்யக்ஷமாய்த் தெரிகிறான்.

யார் அவனை விசேஷமாக ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களோ அவர்களுக்கு ஐச்வர்யத்தை வாரி வழங்கக்கூடியவன் அவன். விசேஷமான பலன்களை அள்ளித்தரக் கூடியவன்.

'ஹே அக்னே!' என்று அழைத்துப் பண்ணுகிற ஸ்தோத்திரத்திற்கு சாமான்யமான பொருள் இதுதான் – மேலெழுந்தவாரியான அர்த்தம்.

திவ்ய பிரபந்தத்துக்கு, மஹான்களும் ஆசார்யர்களும் உள்ளே இருக்கிற அர்த்தம், வெளியிலே தெரிகிற அர்த்தம் என்று இரு விதமான அர்த்தங்கள் காட்டிக் கொடுத்தார்கள். வேதத்திலேயும் இப்படி உள்ளர்த்தம் வெளியர்த்தம் என்று இரண்டு வகை இருக்கிறது. உள்ளுக்குள்ளே இருக்கிறதை ஆராய்ந்து பார்த்தால், அக்னி சப்தத்துக்கு விஷ்ணு என்பதுதான் பொருள்.

– இதையும் வித்யாரண்யரே சொல்லுகிறார். மத்வாசார்யர் பல இடங்களில் அடித்துச் சொல்கிறார். ஆதிசங்கர பகவத்பாதாள் எடுத்துக் காட்டுகிறார். எல்லா ஆசார்யர்களும் ஒருசேர, ஒருமித்த கருத்துடன், அக்னி சப்தத்தினால் சொல்லப்படக்கூடியவன் விஷ்ணு என்றே சொல்கிறார்கள்.

அப்படி எடுத்துக் கொண்டாலும் எடுத்துக்கொள்ளலாம். அல்லது, அக்னிக்கு அந்தர்யாமியாக பகவான் இருப்பதனாலே அவன் விஷ்ணு என்றும் கொள்ளலாம். விஷ்ணு என்கிற சப்தத்துக்கு அந்தர்யாமித்துவம் என்று பொருள். எங்கும் இருக்கக் கூடியவன்.

அக்னி என்கிற தேவதைக்கும் அந்தர்யாமியாய் இருந்து பலனைக் கொடுக்கிறான்.

இதைத்தான் மீமாம்ஸ சாஸ்திரத்திலே ஜைமினி மஹரிஷி விசேஷமான சூத்திரங்களிலே விவரிக்கிறார். விஷய விசாரம் பண்ணுகிறபோது:

யக்ஞமே பலனைக் கொடுக்கிறதா? யக்ஞத்தினாலே ஆராதிக்கப்படுகிற தேவதை பலனைக் கொடுக்கிறதா? என்பது விசாரம்!

விசாரம் பண்ணி, யக்ஞமே எப்படி பலனைக் கொடுக்கும்? யக்ஞத்தை ஏற்றுக் கொள்கிற தேவதைதான் பலனைக் கொடுக்கும் என்று சொல்கிறார். அந்த யக்ஞத்தினால் சந்துஷ்டி அடைகிற தேவதைதான் பலனைக் கொடுக்கிறது.

கர்ம விசாரம் என்பது அதோடு நின்று இருக்கிறது.

பிரும்ம விசாரம் வேறு. பிரும்ம சூத்திரத்துக்கு வருகிறபோது, இன்னொரு படி மேலே ஏறுகிறது.

அந்த தேவதைதான் பலனைக் கொடுக்கிறதா?

இல்லை!

'அந்த தேவதைக்கும் அந்தர்யாமியாய் இருக்கிற பகவான்தான் பலனைக் கொடுக்கிறார்' என்பதை பிரும்ம சூத்திரத்தின் மூலமாகத் தெரிந்து கொள்கிறோம்.

கர்மா பலனைக் கொடுக்கவில்லை; கர்மாவினால் ஆராதிக்கப்படுகிற தேவதை பலனைக் கொடுக்கிறது. இது சத்தியம். அதில் கடைந்தெடுத்துத் தேறிய பொருள் – கடைசியாக நாம் கிரஹிக்க வேண்டியது என்னவென்றால், எல்லா தேவதைகளுக்கும் பலத்தைக் கொடுத்து, புஷ்டியைக் கொடுத்து, தேஜஸைக் கொடுத்து, எல்லோருக்கும் அந்தர்யாமியாய் இருக்கிற அந்த எம்பெருமான் பகவான்தான் பலனைக் கொடுக்கிறான் என்பதை நாம் உணர வேண்டும்.

பிரும்ம சூத்திரத்தின் மூலமாக இதை நாம் தெரிந்து கொள்கிறோம்.

இதற்கு சுவாமி தேசிகன் ஓர் அழகான உவமை சொல்லிக் காட்டுவார்: ஒரு சக்கரவர்த்தி – ராஜா உட்கார்ந்திருக்கிறான். அவன் உயர்ந்த பட்டுப் பீதாம்பரத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறான். அதற்குள் உயர்ந்ததொரு சட்டை போட்டுக் கொண்டிருக்கிறான். அதற்குள் அங்கி போட்டுக் கொண்டிருக்கிறான். அதற்குள்ளே அவன் சரீரம் இருக்கிறது. இப்படி அவன் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவனுக்குச் சேவகர்கள் பக்கத்திலிருந்தபடி பணிவிடை பண்ணுகிறார்கள். ஒரு சேவகன் பன்னீர் தெளிக்கிறான். ஒருத்தன் சந்தனத்தை எடுத்துத் தெளிக்கிறான், புஷ்பத்தை எடுத்துப் போடுகிறான்.

மேலே போட்டுக் கொண்டிருக்கிற அங்கியா சந்தோஷப்படுகிறது? சொக்காயா சந்தோஷப்படுகிறது. உள்ளுக்குள்ளே உட்கார்ந்து கொண்டிருக்கிற ராஜாவல்லவோ சந்தோஷப்படுகிறான். அந்த ஆத்மாவல்லவோ சந்தோஷப்படுகிறது! அந்த மாதிரி நாம் எத்தனை கர்மாக்கள் பண்ணினாலும் சர்வாந்தர்யாமியாக இருக்கிறானே அந்த எம்பெருமானுக்கே அவை யாவும் சேரும்.

## அருள்வாக்கு

**மனம் கெட்டுப் போய் எவ்வளவோ பாபம் செய்திருக்கிறோம். குழந்தையாக இருந்ததிலிருந்து ஈசுவர தியானம் செய்திருந்தால் இவ்வளவு நாள் எவ்வளவோ பாபம் போயிருக்கும். இப்பொழுதோ மேலேயும் பாபத்தைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறோம். எத்தனை நாட்கள் ஈசுவர சரணாரவிந்த தியானம் செய்கிறோமோ அவ்வளவு நாட்களும் நம்முடைய பிறவிப் பயனை நாம் அநுபவித்தவர்களாகிறோம். இந்த ஜன்மத்தை எடுத்ததற்குப் பலன் அதுதான்.**

**நாம் எவ்வளவு நாழிகை தியானம் பண்ணுகிறோம் என்று அனைவரும் தங்களைத் தாங்களே கேட்டுக் கொள்ள வேண்டும். தினந்தோறும் பல காரியங்களைச் செய்து வருகிறோம். ஆனாலும் ஈசுவரத் தியானம் மிகவும்**

மனு ஸ்ம்ருதியிலே சொல்லப்பட்டிருக்கிறது.

தேவ சப்தத்தினாலே சொல்லப்படுகிறவன் பகவான்.

கையிலே கொம்பெடுத்து ஆடு, மாடு மேய்க்கக் கூடியவர்கள் 'ஹாய்! ஹாய்!' என்று சொல்லிக் கொண்டே அவற்றை வரிசைக் கிரமமாக ஓட்டிக் கொண்டு போகிறார்கள். அந்த மாதிரி பகவான் நம்மை ஓட்டுவானா? கொம்பால் தள்ளி வரிசையிலே கொண்டு போய்ச் சேர்ப்பானா என்றால், அப்படியில்லை...

என்ன பண்ணுகிறான் அவன்?

'சுவபுத்யா யோசயந்திதவ்' – அவர்கள் புத்திக்குள்ளே பிரவேசித்து நல்ல வழியிலே

கொஞ்சந்தான் செய்திருப்போம். வம்பு, வீணில் செலவான காலமெல்லாம் ஈசுவரத் தியானத்தில் செலவழித்திருப்போமானால் இப்பொழுது பாப மூட்டைக்குப் பயப்பட வேண்டாம். இப்பொழுது மூட்டை வர வர ஏறிக் கொண்டே இருக்கிறது. நாம் பூலோகத்தில் வந்து விட்டோம். இனி, யாராக இருந்தாலும் போயாக வேண்டும்; இதுவரை இந்த லோகமானது அழுக்கை ஏற்றிக் கொள்வதற்கே இடமாக இருந்து விட்டது. இப்படியிருந்தது போதும் இனிமேல் இது அழுக்கை அலம்புகிற இடம் என்று ஆக்கிக் கொள்வோம். தேஹம், மனசு, சாஸ்திரம், க்ஷேத்திரம், தீர்த்தம் முதலிய பல சௌகரியங்கள் இந்த உலகில்தான் இருக்கின்றன. நாம் வாக்கினாலும்



மனத்தினாலும் கைகால் முதலியவற்றாலும் பாபம் செய்து இருக்கிறோம். அந்த பாபங்களையெல்லாம் வாக்கையும், மனசையும், அவயங்களையும் கொண்டே புண்ணியம் செய்து கரைத்துவிட வேண்டும். நாம் இந்த உலகை விட்டுப் போவதற்குள் 'பாப மூட்டை இல்லை' என்று சொல்லும்படி செய்து கொண்டால், அப்புறம் பஞ்சைப் போல் ஆனந்தமாகப் பறந்து போகலாம். எங்கிருந்து புறப்பட்டோமோ அங்கேயே போய்ச் சேர்ந்து விடலாம். அப்புறம் மாறாத ஆனந்தமாகவே இருக்கலாம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

போகச் செய்வான். அந்த பகவானுடைய பிரேரணை இல்லையானால் நம்மால் அந்த மார்க்கத்தில் போக முடியாது. அவன்தான் நம் பாதையைப் பிரேரேபிக்கிறான்.

இந்த மனு ஸ்ம்ருதி கருத்தைத்தான் சுவாமி தேசிகன் 'நிலை தந்த தாரகனாய் நியமிக்கும் இறைவனுமாய்' என்கிறார்.

நிலை தந்த தாரகன் என்றால், இந்த பூமியிலே லீலா விபூதியிலே நமக்கு இடம் கொடுத்திருக்கிறான்; நம்மை நியமிக்கிறான். 'இப்படிப் போ; அப்படிப் போகாதே' என்று காட்டுகிறான்.

ஒருத்தர் கெட்ட வழியிலேயே போய்க் கொண்டிருந்தார். பல அக்கிரமங்களைப் பண்ணினார். திடீரென்று ஒரு நாள் அவர் திரும்பி நல்ல வழியிலே நடக்கிறார்! பரம பாகவதோத்தமராக வந்து நிற்கிறார்.

'இவர் துஷ்டராக இருந்தாரே... இப்போது இப்படி வந்து நிற்கிறாரே... திடீரென்று இப்படி மாறியதற்கு என்ன காரணம்?' என்று யோசிக்கிறோம்.

பகவான் அந்த புத்தியை இன்றைக்குத் தான் கொடுத்திருக்கிறான் அவனுக்கு. அவன் புத்தியிலே பிரவேசித்து, 'இத்தனை நாள் பண்ணியதெல்லாம் தப்பு! இப்படி மாற்றிச் செய்ய வேண்டும்' என்ற 'எண்ணத்தை உண்டு பண்ணியிருக்கிறான்.

ஆகையினாலே, இப்படி ஒருத்தர் திடீரென்று மாறினால், பகவான் அனுக்கிரஹம் பண்ண ஆரம்பித்து விட்டார் என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

எத்தனையோ கிரஹங்களில் நாம் பார்க்கிறோம். 'இவர்கள் இந்த விஷயத்திலெல்லாம் ஈடுபடுவது இடையாது; பகவத் விஷயத்தில் இவர்களுக்கு ஈடுபாடு இல்லை; இதிகாச புராணங்களில் ஆர்வம் இல்லை... இதிலேயெல்லாம் சிரத்தையாக இருக்கிறவர்கள் மற்ற இரண்டு பேர்தான்...' என்று பேசுவார்கள்.

ஒரு நாள் என்ன ஆயிற்று? 'அப்படி' வேறு பக்கமாகப் போய்க் கொண்டிருந்தவர்களெல்லாம் 'இதிலே' வந்து விட்டார்கள். இதிலே ஏகமாக ஈடுபாடு வந்து விட்டது! அவர்கள் வீட்டிலேயே ஆச்சர்யப்படுகிறார்கள். 'இப்படி இருக்க மாட்டாரே? ஏன் இப்படி ஆகிவிட்டார்?' என்கிறார்கள்.

'ஏன் ஆகிவிட்டார்?' என்றால் பகவான் வேலை செய்ய ஆரம்பித்து விட்டாரென்று அர்த்தம்! புத்தியிலே பிரவேசித்து, இப்படிப் பண்ண வேண்டும் என்று அவன்தான் நடத்துகிறான். பகவான் நடத்தி விட்டானானால் அதற்குப் பிறகு விசேஷமான பலனை நாம் அனுபவிக்கிறோம்.

ஆகையினாலே **அவன் புரோஹிதன்:** எப்போது பண்ண வேண்டும், எதைப் பண்ண வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும்.

இப்படிச் சொன்னபோது ஒருத்தர்

## அரசுக்கு ஒரு வேண்டுகோள்!



• வெட்டப்படு வதற்கு முன்





• வெட்டப்பட்டப் பின்

**வி**ளம்பரப் பலகைகளின் சொந்தக்காரர்கள் மிக மிக மிகச் சாமானியர்கள். அவர்களுக்கு மேலிடத்து சிபாரிசும் ஆதரவும் மருந்துக்குக் கூடக் கிடையாது. ஏதோ பாவம், வயிற்றுக்கும் வாய்க்கும் போதாமல் தான் தொழில் செய்து கொண்டிருக்கிறார்கள்!

இல்லையெனில், சென்னை விமான நிலையத்துக்கு எதிரிலுள்ள திரிசூலம் (புறநகர்) ரயில் நிலையத்துக்கருகில் தங்கள் விளம்பரப் பலகையை வைப்பார்களா? தங்களின் புதிய வி. பலகையை மறைக்கிறது என்பதற்காக அருகிலிருந்த பச்சை மரத்தை வெட்டிச் சாய்ப்பார்களா?

இனியாவது அரசாங்கம் ஒன்று செய்யலாம். 'வி. பலகை சொந்தக்காரர்கள் கடவுளின் புதல்வர்கள்; அரசாங்கத்தின் வளர்ப்புப் புத்திரர்கள். அதனால் அவர்களுக்குப் பச்சை மரங்களை வெட்டி வெட்டித் தள்ளுகிற முழு சுதந்தரம் இருக்கிறது' என்று கெஜட்டில் வெளியிட்டு விடலாம்.

அரசு இதையாவது உடனடியாகச் செய்ய வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக் கொள்கிறோம்!

— இளங்கோவன்

கேட்டார்: 'இருபது வருஷமாக தப்புக் காரியம் பண்ணிக் கொண்டு, தப்பு வழியிலே போய்க் கொண்டிருந்தாரே. இந்த பகவான் இருபது வருஷம் கழித்துத்தானே – இப்போதுதானே அவரை நல்வழிப்படுத்தினான். அவர் நினைத்திருந்தால் இருபது வருஷத்துக்கு முன்னேயே அவரை நல்வழிப்படுத்தி அழைத்துக் கொண்டு போயிருக்கலாமே? ஏன் இவ்வளவு காலம் கடத்தினார்...?'

அதைத்தான் நாமும் தெரிந்து கொள்ள வேண்டும். பெரிய மூட்டை வைத்துக் கொண்டிருக்கிறானே அவன்! பாப மூட்டை! அந்த மூட்டை அழிந்த பிற்பாடு பகவான் வருவான். அவன் ஜன்மாந்திரத்திலே பண்ணிய பாவமெல்லாம் அழிய வேண்டும் என்று காத்திருக்கிறான் பரமாத்மா.

பாபம் எப்படிக் கழியும்? பாபம் கழிய வேண்டுமானால் பகவானை சேவிக்க வேண்டும். அதையும் பண்ணாமலேயிருக்கிறானே! அதனாலே அந்தப் பாப வழியிலேயே அவனைப் போகவிட்டு, அப்புறம் நல்ல வழியிலே திருப்புகிறான்.

எவ்வளவு பெரிய காரியம் பண்ணிக் கொண்டிருக்கிறான் அவன்! ஒருத்தரைத் திருத்துவதே நமக்குப் பெரிய காரியமாயிருக்கிறது. உலகத்தில் இருக்கிற இத்தனை பேரையும் திருத்த வேண்டும் என்றால் அவன் எவ்வளவு சிரமப்படுகிறான்! அவன் படுகிற சிரமத்துக்கு நாம் அவனை எவ்வளவு நாழி ஆராதிக்க வேண்டும்!

திருவடி நோக நோக பூமியில் அவதாரம் பண்ணினானே! 'நடந்த கால்கள் நொந்தவோ' என்கிறார் ஆழ்வார்.

இஞ்சிமேட்டு ஸ்ரீமத் அழகிய சிங்கர் ரொம்ப அழகாகச் சொல்லுவார்: 'ஒரு கல்ப கோடி யுகத்தில் ஒரு ஜீவனாவது தன்னை உள்ளபடி கண்டு உஜ்ஜீவிக்கக் கடவன் என்கிற பரம காருண்யத்தை உடையவன் பகவான்' என்று.

ஒரு யுகமில்லை, ஒரு கோடி யுகமில்லை; ஒரு கல்பகோடி யுகத்துக்கு ஒரு ஜீவனாவது தம்மை உள்ளபடி கண்டு உஜ்ஜீவிக்கட்டுமே – ஒரு ஜீவனாவது கிடைக்க மாட்டானா...' என்று தேடிக் கொண்டு வந்து அவதரிக்கிறானாம் பகவான் நிலவுலகிலே!

பகவான் நம்மை மேலே அழைத்துப் போக எப்பவும் சிரத்தையாகக் கை நீட்டிக் கொண்டிருக்கிறான். அதற்குத் தகுதியுடையவர்களாக நம்மை நாமே ஆக்கிக் கொள்ள வேண்டும்.

(தொடரும்)

# கோடி கோடியாகச் சம்பாதித்தாலும்...

"நான் இந்தாலியத் திரைப்படம் ஒன்றில் நடித்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் மானவிகா சிங்.

அப்பா ஹரியானா மாநிலத்தின் டி.ஜி.பி. ஆக இருந்து ரிடையரானவர். இவர் மாடலிங் துறையில் இருந்துவிட்டு, இப்போது சினிமாவில் குதித்திருக்கிறார். அதுவும் இத்தாலிய சினிமா!

"அதெப்படிங்க? இங்கே இல்லாமல் நேரடியாய் இத்தாலிய வாய்ப்பு? சோனியா காந்தி சிபாரிசு பண்ணினாங்களா?"

சிரித்தார். "மாடலிங் வாய்ப்புகள் கிடைத்துக் கொண்டிருந்த சமயத்தில் சினிமாவில் நுழைகிற ஆர்வம் வந்தது. என் புகைப்படங்களை மாடலிங் கோ-ஆர்டினேட்டர்களிடம் கொடுத்து வைத்திருந்தேன். அவர்களில் ஒருவர் மூலமாகத்தான் வாய்ப்புக் கிடைத்தது.

"என்ன கதை?"

"இருபது வயது இளைஞன்தான் ஹீரோ. அவனை மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அவனுடைய அம்மா, அவனது மூளையை வேறு ஒருவருக்கு 'டிரான்ஸ்பிளாண்ட்' பண்ணி, அவன் புதிய உடலில் வாழ வேண்டும் என விரும்புகிறாள். மகனோ, நிம்மதியாய் என்னை செத்துப் போக விடு என்கிறான். 'கில்ஸ்' என்பது படத்தின் தலைப்பு."

"கில்ஸ் என்றால் இத்தாலிய மொழியில் என்ன அர்த்தம்?"

"இத்தாலியில் என்ன அர்த்தம் என்று எனக்குத் தெரியாது. ஆங்கிலத்தில் மீனின் சுவாச உறுப்பைக் குறிப்பிடுவார்கள்... கதைக்கு வருகிறேன்... இந்தியாவில், உடல் உறுப்பு டிரான்ஸ்பிளாண்ட்டை சட்டத்துக்குப் புறம்பாகச் செய்து பணம் சம்பாதிக்கிற கும்பல், அந்த இளைஞனைக் குறி வைக்கிறது. அந்த இளைஞனை மயக்கி, மடக்கும் ரோல் எனக்கு."

"சில்க் ஸ்மிதா டைப் ரோல் போல! அடுத்து வரும் படங்களிலும் அதே போல கேரக்டர்களாகவே கொடுத்து கடுப்படிப்பார்களே, நம் திரையுலக சிருஷ்டிகர்த்தாக்கள்? இது பற்றி யோசிக்கவில்லையா?"

"இத்தாலியப் படத்தில் அப்படி நடித்தால், இங்கே முத்திரை குத்தமாட்டார்கள் என்ற நம்பிக்கைதான். 'கில்ஸ்' படத்தின் கிளைமாக்ஸ் என்ன தெரியுமா? அந்த இளைஞன் மரணமடைவான். அவன் உடல் படிப்படியாக மீனாக மாறும். அவன் மறுபடி உயிர்பெற்று நீந்தத் தொடங்குவான். கிரேஸியான கதைதான். ஆனாலும் சர்வதேசத் திரை விழாக்களுக்கு அனுப்பப்படவிருக்கிறது!"

"மாடலிங்கிலிருந்து சினிமாவுக்கு வந்தவர்களில் சுஷ்மிதா சென் முதல் நேற்று வந்த (உயிரே) ப்ரீதி வரை பலரும் தோற்றுப் போய் விட்டார்களே!"

"அது உண்மைதான். மாடலிங்கைப் போல சினிமா அத்தனை சுலபமில்லை. மாடல்கள் சினிமாவில் தோற்க அவரவர் தனிப்பட்ட திறமை, கேரக்டர் என்று பல காரணங்கள் உண்டு. அது அவரவர் நேரத்தைப் பொருத்தது. என் விஷயத்தில் பொது விதி பொருந்தாது என்று நம்புகிறேன். நம்பிக்கைதானே வாழ்க்கை?"

"தமிழ்ப் படம் எதாவது பார்த்திருக்கிறீர்களா?"

"ஓ எஸ்! ஒண்ணே ஒண்ணு பார்த்திருக்கிறேன். அஞ்சலி. தமிழ் சுத்தமாகத் தெரியாது. ஆனாலும் படத்தை ரசித்தேன்."

"நம் சினிமாக்களில் காட்டப்படும் காதல் பற்றி உங்கள் கருத்து என்ன?"

"சுத்த அபத்தம்! நிஜத்தில் எந்தக் காதலர்கள் மரத்தைச் சுற்றி ஆடிக் கொண்டிருக்கிறார்கள்? கட்டிக் கொண்டு உருளுகிறார்கள்? இந்த அபத்தக் களஞ்சியத்தின் கிளைமாக்ஸ் என்ன தெரியுமா? இரண்டு பூக்கள் சேர்வது போலவோ, ஜோடிப் புறாக்கள் மூக்கை உரசிக் கொள்வது போலவோ காட்டுவது! வாட் ஏ ஸ்டுப்பிட் கான்செப்ட்!"

"நிஜ வாழ்க்கைக் காதல் பற்றி உங்கள் எண்ணம்?"

"கண்களில் ஆரம்பித்தாலும், மனங்கள் ஒன்று சேர வேண்டும். ஆரம்பத்தில் 'லுக்ஸ்'க்கு முக்கியத்துவம் கொடுத்தாலும், காலப் போக்கில், அது ஆழமாகி, நீண்ட நாள் நிலைக்க வேண்டும். இன்றைய வாழ்க்கையில் எல்லாமே ஃபாஸ்ட்! காதல் கல்யாணம், டைவர்ஸ் எல்லாமே ஃபாஸ்ட்! கோடி கோடியாகச் சம்பாதித்தாலும், வீட்டுக்கு வரும்போது, அன்போடு பிடித்துக் கொள்ள ஒரு கரம் முக்கியம்! அது இல்லையெனில் வாழ்க்கையில் பயனில்லை என்பதே என் கருத்து."

ஹ்ூம்! சினிமாவில் நடிக்கப் போகிறார்! ●

சந்திப்பு : **மானஸா**

அட்டை மற்றும் வண்ணப்படம் : **ப்ரவீன் குமார்**

உங்கள் குழந்தைக்கு புதிய ஃபாரெக்ஸ் நியூட்ரி-பௌல் பரிசாகக் கொடுங்கள். அவன் அதைக் கண்டு மகிழ்வதைப் பாருங்கள்.



புதிய ஃபாரெக்ஸ் நியூட்ரி-பௌல் பாதுகாப்பானது. நீடித்து உழைக்கக் கூடியது. ஆரோக்கியமானது. ஃபாரெக்ஸ் உணவைக் கலந்து உங்கள் குழந்தைக்கு ஊட்ட முற்றிலும் சரியானது.

ஃபாரெக்ஸ் கிட் அல்லது ஃபாரெக்ஸ் ரைஸ் பேக்குடன் மட்டுமே இலவசம்.

**Farex**

GROWING UP RIGHT

ஆஃபர் 28.2.99 அல்லது சரக்கு உள்ள வரை மட்டுமே.
இந்த ஆஃபர் இல்லாமலும் பேக்குகள் குறிப்பிட்ட மார்க்கெட்களில் கிடைக்கின்றன.

CONTRACT.FRX.25366.TA

# 1

# படகில் ஒரு பெண்

**யா**ரோ தட்டி எழுப்பின மாதிரி சட்டென்று விழிப்புக் கொடுத்தது தனபாக்கியத்திற்கு. பக்கத்தில் செந்தில் மொச்சை விதை போல் சுருண்டு படுத்திருந்தான்.

எழுந்து, மூலையில் இருந்த பிளாஸ்டிக் குடத்தை எடுத்துக் கொண்டாள். குடிசையின் கதவைத் திறந்து வானத்தைப் பார்த்தாள். விடிய இன்னும் ஒரு மணி நேரம் செல்லும் என்று நட்சத்திரங்கள் தெரிவித்தன.

அந்த மீனவக்குடியிருப்பு மகாபலிபுரத்துக் கடற்கரையில் அமைந்திருந்தது. மணலை ஒட்டி போடப்பட்டிருந்த சாலையில், அங்கங்கே தீவு, தீவாகக் காய்ந்து கொண்டிருந்த கருவாட்டு மீன்களின் மணம் காற்றில் கலந்திருந்தது. சற்று தூரத்தில் கடல் இருட்டாகத் தெரிந்தது. அலைகள் வெள்ளைப் பிடரிகளைக் கொண்ட கறுப்புக் குதிரைகளைப் போல் தெரிந்தன.

அலைகளின் இரைச்சல் தனபாக்கியத்தின் உள்ளத்தில் தைத்தது. ஒரு மாதம் முன்பு வரை அவள் வாழ்க்கையில் கலந்து இருந்த அலைகளின் இரைச்சல் இப்போது உறுத்தியது.

வேலுச்சாமி அந்த அலைகளை எதிர்த்துத்தான் கட்டு மரத்தைச் செலுத்திக் கடலுக்குள் போனான். ஆனால் திரும்பவில்லை. அவனுக்கு முன்னால் போனவர்களும், பின்னால் போனவர்களும் வந்து விட்டார்கள். வேலுச்சாமி மட்டும் வரவில்லை.

தனபாக்கியத்தைத் திகில் தின்றது. குழந்தை செந்திலின் தோளில் கைவைத்து அணைத்து, அன்றைக்கு ஈர மணலில் நின்று கடலின் தொடுவானையே பார்த்துக் கொண்டிருந்தாள். இதோ வந்து விடப் போகிறான், அதோ வந்து விடப் போகிறான், என்று ஏங்கி ஏங்கிப் பார்த்தாள்.

செந்தில் விஷயம் புரியாமல் சிப்பிகளைப் பொறுக்குவதும், நண்டுகளை விரட்டுவதுமாய் அந்த உப்பு நீரில் தப், தப் என்று கும்மாளமிட்டுக் கொண்டிருந்தான். வேலுச்சாமி வரவில்லை.

புறப்படும் போதே வேலுச்சாமி உற்சாகத்திற்காக சரக்கு ஏற்றிக் கொண்டிருந்தான். கடலுக்குப் போகிறவர்கள் யாரும் குடித்து விட்டுப் போவதில்லை. குப்பக் கட்டுப்பாடு.

அந்தத் தோஷம்தான் கடலைக் கோபம் கொள்ள வைத்து விட்டது என்று குப்பம் தீர்ப்புக் கூறிவிட்டது. கடல் அவனை விழுங்கி விட்டது என்று பதற்றம் இன்றித் தீர்மானித்து விட்டது.

பயமும், பதற்றமும், வேதனையும், துக்கமும் அவளுக்குத்தான். அவள் வாழ்க்கையின் ஆதாரம் அவன். இரை தேடிக் கொண்டு வந்து கொடுத்தவன். அவளையும், செந்திலையும் காப்பாற்றியவன். திடீரென அவன் இல்லவே இல்லை என்றால்...

அவள் வாழ்வு அப்படி ஒன்றும் மற்றவர் பார்த்துப் பொறாமைப்படும் வாழ்வாக இருந்து விடவில்லை. வேலுச்சாமிக்கு அவள் இருக்கிறாளோ இல்லையோ, ஒரு கிளாஸ் சாராயம் இருந்தால் போதும். சாராயத்தைக் குடித்துவிட்டுப் போதையின் உச்சத்தில் அவளுடன் சண்டை போடுவான். வஞ்சிரமீனை வறுக்காமல் குழம்பு வைத்து விட்டால் தட்டு பறக்கும். அவள் தலைமுடியைப் பற்றி உலுக்கி, தொப் தொப்பென்று முதுகில் அடி. வயிற்றில், இடுப்பில் உதை.

வேலுச்சாமி இல்லாதது சோகம்தான். ஆனால் ஒரு விதத்தில் கொஞ்சம் நிம்மதியாகக் கூட இருந்தது. அதட்டும் குரல் இல்லை. ஓங்கும் கை இல்லை. உதைக்கும் கால் இல்லை. அதனால் எப்போதுமே பயந்து, பயந்து ஒடுங்கிப் போயிருந்த மனமும், உடலும் இப்போது ஓரளவிற்கு சுதந்தரம் என்றால் என்னவென்று தெரிந்து கொண்டிருக்கிறது. அந்தச் சுதந்தரம் பிடித்தும் இருந்தது.

**த**ண்ணீர் பிடித்துக் கொண்டு குடிசைக்குள் நுழையும் போது செந்திலின் அழுகைக் குரல் கேட்டது. துணுக்குற்றாள்.

"செந்திலு.... ராஜா..



ஏன் கண்ணு அழுவுறே? அம்மா தண்ணி புடிக்கப் போயிருந்தேன் கண்ணு... இன்னுங் கொஞ்ச நேரம் தூங்கு.''

''அப்பா வேணும். நான் எழுந்துக்க சொல்லொ அப்பா இருப்பாருன்னு சொன்னியே... எங்க அப்பா?''

''அப்பா இல்லன்னா என்ன கண்ணு? அதான் நான் இருக்கேன் இல்ல?''

''அப்பா மாதிரி நீ பொறை பிஸ்கோத்தும், டீயும் வாங்கித் தரியா?''

''ஆவட்டும். எழுந்து பல்லைத் தேய்ச்சினு வா. வாங்கித்தரேன்.''

செந்தில் எழுந்து கொண்டான். தூக்கம் தொங்கும் விழிகளுடன் குடிசையை விட்டு வெளியே போனான். தனபாக்கியம் எவர்சில்வர் செம்பை எடுத்துக் கொண்டு டீக் கடை நோக்கி ஓடினாள்.

செந்தில் ஊதி ஊதி, உறிஞ்சி உறிஞ்சி டீ குடித்தான்.

களங்கம் எதுவுமற்ற அந்தச் செய்கையில் ஓர் அழகு இருந்தது. பிஸ்கட்டையும், டீயையும் காலி பண்ணுவதுதான் வாழ்க்கையின் இப்போதைய வேலை என்பது போல் ஆழ்ந்து அனுபவித்து அவன் சாப்பிடுவதையும், உறிஞ்சுவதையும் பார்க்கப் பார்க்க அவளுக்குப் பெருமிதம் பிடிபடவில்லை.

''யம்மோவ்'' என்றான் செந்தில்.

''என்ன கண்ணு?''

''அப்பா எப்ப வருவாரும்மா?'' என்று பல்லவியைப் பிடித்துக் கொண்டான்.

அவளுக்கு திக்கென்றது. என்ன பதிலைச் சொல்லிச் சமாதானம் செய்வது என்றே அவளுக்குப் புரியவில்லை. வேலுச்சாமியைக் கடல் காவு கொண்டு விட்டதென கருமாதிக் காரியங்கள் எல்லாம் கூட நடந்து விட்டன. செந்திலுக்கு இறப்பு என்றால் இன்னும் என்னவென்று தெரியாத பருவம். அவனைப் பொறுத்தவரை அப்பா என்பது அவனது தேவைகளை நிறைவேற்றும் ஒரு கருவி. காலையில் பொறை, டீ. முற்பகலில் சமூசா. வெயில் மிகுந்த நேரங்களில் சைக்கிள் பெட்டிக்காரனிடம் குச்சி ஐஸ். பணம் விளையாடும் சந்தர்ப்பங்களில் ஆப்பம், பாயா, சிக்கன்

சுபா

பிரியாணி, ரஜினி சினிமா, ராத்திரி நேரங்களில் போதையின் துணையுடன் அவன் சொல்லும் சாகசக் கதைகள்.

"ஆமாண்டான்னா. எவ்ளோ பெரிய சொறா மீனுங்கறே? வாலைச் சொழட்டி ஒரு அடி அடிச்சதில அப்படியே கட்டு மரம் கவுந்து பூட்ச்சி. உட்டேனா நானு? சட்டுன்னு ஒரே குதியா, குதிச்சி சொறா மேல ஏறி உக்காந்துக்கினு, நம்ப சூரிக்கத்தி இல்ல, அதால ஒரே கிழி. மானம் வரைக்கும் ரத்தம் அடிச்சது பாரு..."

தனபாக்கியத்திற்கு அப்படி இட்டுக்கட்டி கதை சொல்லும் திறமை எல்லாம் இல்லை.

"கேக்கறேனே. அப்பா எப்ப வருவாரு? சொல்லும்மா..."



''நீங்களும் அந்த டைரக்டரும் மேரேஜ் பண்ணிக்காமலே ஏன் கணவன்-மனைவியா குடும்பம் நடத்தறீங்க?''

''டைவர்ஸ் தொல்லை இல்லாமலே பிரிஞ்சிடலாம்னுதான்!''

– சீர்காழி ரேவதி

"வந்துருவாருடா... நீ இஸ்கோலுக்குப் போவச் சொல்லோ வந்துருவாரு."

கட்டு மரங்கள் கரை திரும்பும் நேரம். வலை மீன்களைத் திரட்டி ஏலம் விடுவதற்கு முன் அவன் போனசல்தான் ஏதோ கொஞ்சம் சதைப் பிடிப்பாயுள்ள மீன்களை வாங்கிப் போய் ஹோட்டல்காரனிடம் சேர்க்க முடியும். நல்ல மீன் என்றால்தான் காசு கிடைக்கும். சிறு மீன்களையும், நெத்திலிகளையும் ஹோட்டல்காரன் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டான். கூறு கட்டி விற்றால் கூட யாரும் வாங்க மாட்டார்கள்.

தனபாக்கியம் பரபரப்பாக எழுந்தாள்.

முத்துக்குமார் மகாபலிபுரத்தில் ஒரு வழிகாட்டி. அன்றைக்குக் காலையில் அவனுக்கு வெயிட்டான அயல்நாட்டு பார்ட்டி ஒன்று சிக்கியிருந்தது.

பேன் பார்க்கும் குரங்கு சிற்பம், கிருஷ்ணன் சாப்பிட்ட வெண்ணெய் உருண்டை, கலங்கரை விளக்கம், வராக மண்டபம், ஐந்து ரதம் எல்லாம் சுற்றிக் காட்டினான். தொல்பொருள் ஆராய்ச்சிக்காரர்கள் வைத்திருந்த போர்டுகளில் இருந்த தகவல்களுடன் தனது கற்பனையையும் சேர்த்து ஆங்கிலத்தில் பிளந்து கட்டினான். அவர்களுக்கு மகிழ்ச்சி. ஐநூறு ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தார்கள்.

முத்துக்குமாருக்கு மகாபலிபுரத்திலேயே மிகவும் பிடித்தமான இடம் அதன் கடற்கரையும், கோயிலும்தான். கடற்கரையில் இருக்கும் சிதிலமடைந்த கற்கோயில் அவனுக்கு எப்போதும் ஒரு கனவுலகத்தைக் கண் முன் நிறுத்தும். மொட்டையாய் நிற்கும் கல் தூண்கள். காலுக்குக் கீழே மெத்தென்ற உணர்வைத் தரும் கடற்கரை மணல். சில மறைவுகளில் மறைந்து கொண்டு ரகசியக் குரலில் காதல் பேசும் இளம் ஜோடிகள்.

முத்துக்குமார் அந்தக் கோவிலை நோக்கி உற்சாகமாக நடந்தான்.

அவனுக்கு கல்பாக்கம்தான் ஊர். பிறந்தது, வளர்ந்தது, அடிபட்டது, அழுதது செத்து விடக் கூடாதா என ஏங்கியது எல்லாமே அதே கல்பாக்கத்தில்தான். அம்மாவையும் அப்பாவையும் காலரா சாப்பிட்டு விட்டது. சித்தப்பா வீட்டில் வேண்டாத வேலைக்காரனாய் இருக்க நேர்ந்தது. எதற்கெடுத்தாலும் திட்டுதான். சித்திக்கும், சித்தப்பாவிற்கும் தமிழில் நல்ல வார்த்தைகள் இருப்பதே தெரியவில்லை. எப்படியோ ப்ளஸ் டூ வரைக்கும் படிப்புத் தேரை இழுத்து விட்டான். அதற்கு மேல் அங்கே இருக்க முடியாமல் மகாபலிபுரம் வந்து விட்டான். அவனே வழிகாட்டியாக வேலை தேடிக் கொண்டான். வேலை பிடித்திருந்தது. சிற்பங்களுடன் உறவாடப் பிடித்திருந்தது. தினம் தினம் புதுப்புது உற்சாக முகங்கள். ஜீவனுள்ள சிற்பங்கள். இன்னும் என்ன? வாழ்க்கையின் கசப்பான பருவங்களை அவன் நினைத்துப் பார்ப்பதில்லை. அனாவசியத்திற்கு சோகம்தான் மிச்சமாகும்.

மகாபலிபுரத்தில் நிறைய சிற்பிகள். பாறைகளைச் செதுக்கிப் பிள்ளையார் பிடித்தார்கள். நடன நாயகனை வடித்தார்கள். அந்தச் சிற்பிகளில் சொக்கலிங்கத்துடன் பழக்கம் ஏற்பட்டது. வெள்ளை வேஷ்டி. வெள்ளைச் சட்டை. வெள்ளைச் சிரிப்பு. கறுப்பு உடம்பு.

அவர் அவனைத் தமது சிற்பக் கூடத்தி லேயே இருந்து கொள்ளச் சொன்னார். ஓலைக்கூரை. கல்சுவர். காற்று உள்ளே நுழைந்து வெளிப்படும் போதெல்லாம் தம்புராச் சுருதியிசை போல் கேட்டது. அந்த நாதமே அவனிருந்த சிற்பக்கூடத்திற்கு ஒரு தெய்வீகத்தன்மையைச் சேர்த்து விட்டது.

ஒரு மனிதனுக்கு இன்னும் என்ன வேண்டும்?

முத்துக்குமார் கடற்கரைக் கோயிலை அடைந்தான். கல்தூண்களுக்கிடையில், மணலில் கால்கள் புதையப் புதைய நடந்தான். சந்நிதிக்கு மேலே சிறுகோபுரம். அதையொட்டி அவனுக்கென்று ஒரு கல் படுக்கை இருந்தது. பாறைகளின் இடுக்குகளில் கால் வைத்து ஏறினான். கல் படுக்கையில் மல்லாந்து படுத்தான்.

மேற்கில் சூரியன் மெல்ல மெல்ல மூழ்கிக் கொண்டிருந்தான். அஸ்தமன மஞ்சள் வெயிலில் அவனது சாம்ராஜ்யம் மிக அழகாகப் பரந்து விரிந்திருந்தது. கடலில் கால் நனைத்துக் கொண்டிருந்தவர்களின் உற்சாகக் கூச்சல்கள் காதில் விழுந்தன.

வானில் ஒரு மேகக் கூட்டத்தை ஒரே ஒரு ஒற்றை மேகம் வழி நடத்திச் சென்றது. பிரபஞ்சத்தைச் சுற்றிக் காட்டுகிறதோ என்னவோ என்று எண்ணிச் சின்னதாய் ஒரு புன்னகை புரிந்தபோது, கீழே சந்நிதியில் இருந்து ஒரு பிஞ்சுக்குரல் அவன் காதில் வந்து விழுந்தது. கடவுளிடம் கோரிக்கை.

"சாமி. எனக்கு அப்பா வேணும் சாமி. அவரு எங்க போயிருக்காருன்னு சொல்லு சாமி. அப்பா இல்லாம எனக்கு அழ அழயா வருது சாமி. சாமி எங்கப்பா எங்க இருக்கார்னு சொல்லு சாமி."

முத்துக்குமாருக்கு அந்தக் கோரிக்கை வினோதமாயிருந்தது. புரண்டு கீழே பார்த்தான். கடவுளிடம் கோரிக்கை வைப்பது யார் என்று அவனுக்குத் தெரியவில்லை.

"டேய்... செந்திலு... இங்கயா இருக்கே? உங்கம்மா அங்க ஒன்னைத் தேடிக்கிட்டிருக்குதுடா.." என்று இன்னொரு குரல் கேட்டது.

"நான் வரமாட்டேன். சாமிகிட்ட எங்கப்பா எங்கே போயிருக்காருன்னு கேட்டுக்கிட்டிருக்கேன்."

"டேய்... ஒங்கப்பா எங்க போயிருக்காருன்னு ஒனக்குத் தெரியாதா?"

"தெரியாதுடா."

"டேய் சம்முவம். இவங்கப்பா எங்க போயிருக்காருன்னு இவனுக்குத் தெரியாதாண்டா."

"சம்முகம். ஒனக்குத் தெரியுமாடா?"

"ஒங்கப்பா கடலுக்குள்ள தூரத்துல போய் ஒளிஞ்சிக்கிட்டிருக்காருடா."

"மெய்யாவா?"

"ஆமாடா."

"நான் போய்த் தேடுனா கெடைப்பாராடா?"

"கெடைக்காம எங்க போய்டுவாரு. கெடைப்பார்டா."

முத்துக்குமார் திடுக்கிட்டான். ஏதோ ஒரு சின்னஞ்சிறுவனுடன் சில பெரிய சிறுவர்கள் விளையாடுகிறார்கள் என்று தெரிந்தது. கடல் ஏற்கெனவே அந்த இடத்தில் நிறையப் பேர்களை காவு வாங்கியிருக்கிறது. இளம் இதயத்திற்கு எது உண்மை, எது பொய் என்று கண்டறியத் தெரியாது. ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று நேர்ந்து விடப் போகிறது.

முத்துக்குமார் எழுந்தான். பாறை இடுக்குகளில் காலை வைத்துக் கீழே இறங்கி, குறுகலான வழியைக் கடந்து இருட்டான சந்நிதி வாசலுக்கு வந்து சேர்ந்தான்.

அங்கே யாருமில்லை.

சட்டென்று நிமிர்ந்து கடலை நோக்கிப் பார்வையைச் செலுத்தினான்.

ஒரு சின்னப்பையன் கடலுக்குள் தொடுவானம் நோக்கி ஓடிக் கொண்டிருந்தான்.

ஒரு பெரிய அலை, நாகப்பாம்பின் படம் போல் மேல் எழுந்து, கவிழ்ந்து, அந்த சின்னப்பையனை மூடி இழுத்துக் கொண்டது.

(தொடரும்)



**"கிரிக்கெட் பத்தி உனக்கு எதுனாச்சும் தெரியுமா?"**

**"ஓ! சமீபத்தில அனில் கும்ப்ளே பத்து ரன் எடுத்தது வரை தெரியுமே!"**

**- ராஜி**






# தலைகீழாக ஒரு சாதனை!

பெங்களூரில் படித்துக் கொண்டிருந்தபோது, விளையாட்டு ஆசிரியர் அருணகிரி, பள்ளி விளையாட்டு விழாவின்போது தலைகீழாகக் கை ஊன்றி நடக்கச் சொன்னார். அதை கருணாகரன் விளையாட்டாக எடுத்துக் கொள்ளாமல் சின்சியராக எடுத்துக் கொண்டுவிட்டார்!

இந்த ஆர்வம் படிப்படியாக வளர்ந்ததன் விளைவு- பழனி மலையின் உச்சியிலிருந்து தலைகீழாக இறங்கி உலக சாதனை புரிய வைத்தது. இந்தச் சாதனை புரிய வேண்டும் என்ற எண்ணம் வந்ததன் காரணத்தையும் சொன்னார் கருணாகரன். ஒருவர் 108 படிக்கட்டுகளில் தலைகீழாக நடந்து சாதனை செய்தார் என்றதை செய்தித் தாளில் படித்ததிலிருந்து அவருடைய சாதனையை நான் முறியடிக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்குள் எழுந்தது. அது படிப்படியாக வளர்ந்தது. எண்ணம் மட்டும் இருந்தால் போதுமா? கடுமையான பயிற்சிகள் செய்து, முதலில் மதுரை மாடக்குளம் அருகே உள்ள கபாலீஸ்வரர் கோயில் படிக்கட்டுகளில் தலைகீழாக நடந்து ஒத்திகை பார்த்தேன். ஒத்திகையின் போதே 280 படிக்கட்டுகளில் தலைகீழாக நடந்து அவரின் சாதனையை முறியடித்தேன். அந்தக் கோவிலில் உள்ள மொத்தப் படிக்கட்டுகளின் எண்ணிக்கை 575. எனக்கு எல்லாப் படிக்கட்டுகளிலும் இறங்க வேண்டும் என்ற ஆவல் ஏற ஏற... எப்படி இறங்குவது என்ற பயிற்சியில் இறங்கினேன். வீண் போகவில்லை என் ஆசை. அன்றைய போலீஸ் எஸ்.பி. சுப்ரமணியன் முன்னிலையில் 575 படிக்கட்டுகளில் இறங்கி விட்டேன். இந்த சாதனையை நாளிதழ்கள் எழுதி என்னை ஊக்குவித்தன.

''அப்பொழுது உங்களுடைய அடுத்த இலக்கு என்ன?'' என்ற கேள்வியை எழுப்பினார்கள் நிருபர்கள். என் அனுமதி இல்லாமலேயே என்னுடைய நண்பர்கள் 'பழனி மலையில் தலைகீழாக இறங்குவது' என்று (என் மீது நம்பிக்கை வைத்து) சொல்லி விட்டார்கள். எனக்கோ ரொம்ப பயம். காரணம் அதற்கு முன்பு நான் பழனி மலையைப் பார்த்தது கூட இல்லை!

"பழனி மலையின் 700 படிக்கட்டுகளில் தலைகீழாக நடந்து சாதனை செய்த பின்னால் தான் என்னால் சாப்பிடக் கூட முடிந்தது. மாணவன் நினைத்தால் நடத்திக் காட்டுவான்னு சொல்வாங்க. எப்பவுமே மாணவர்களோட இருப்பதால் என்னாலும் நடத்திக்காட்ட முடிந்தது" என்று பெருமையோடு சொல்லும் கருணாகரன், மதுரையில் பல பள்ளிகளின் யோகா, ஜிம்னாஸ்டிக், கராத்தே மாஸ்டர்.

மாஸ்டர் எட்டடி என்றால் மாணவர்கள் பதினாறடி பாய்கிறார்கள்! இவருடைய மாணவர்கள் 15 சைக்கிள்களை நிறுத்தி வைத்துத் தாண்டுவது மாதிரியான சாதனைகளைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள்!

– 'கிரண் நியூஸ்' பழ. சேதுராமன்

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)**

அருமையான உங்கள் வீடுகளுக்கு

அழகும் உறுதியும் நிறைந்த

# மாயூரம் டிம்பர்

## கதவுகள்



- ★ தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்தர மரம்
- ★ சரப்பதம் குறைக்கப்பட்டது.
- ★ ரசாயன கலவை பாதுகாப்பு
- ★ நேர்த்தியான இயந்திர வடிவமைப்பு

MADE TO ORDER BY:

# MAYURAM TIMBER

**& General Trading Corpn.**

Showroom: 13, Rameswaram Road, T. Nagar, Chennai - 600 017.
Phone: 4345207

H.O.: 83, G.S.T. Road, Tambaram, Chennai - 600 045, Tel: 2368297

